# செந்தமிழ்ச் செல்வி

## உள்ளுறை



சிலம்பு-௫௨] வள்ளுவர் ஆண்டு ௨௦௦௯, ஆனி July, 78 [பரல்-௧௧

# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



---



*Publishers :*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS
PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD ,
(Registered Office : 91, Fast Car Street, Tirunelvelly-6.)
79, Prakasam saalai, Madras-1.

# செந்தமிழ்ச் செல்வி

## திங்கள் வெளியீடு

| சிலம்பு ௫௨ | திருவள்ளுவர் ஆண்டு ௨௦௦௯, ஆனி சூலை 1978 | பரல் ௧௧ |
| --- | --- | --- |

## இன்று தமிழ்நாட்டில் மொழி, இன, நாட்டு வளர்ச்சிக்கு எழுச்சியொன்றும் இல்லை! ஏன்?

நெடுங்காலமாகத் தம் நிலை மறந்து அயர்ந்து கிடந்த தமிழ்மக்கள் ஆசிரியர் மறைத்திரு மறைமலையடிகளார், திரு. வி. கல்யாணசுந்தரனார் முதலிய ஒருசிலர் செய்த அருமுயற்சியின் பயனாக எழுச்சியுற்று முன்னேறத் தொடங்கினர். தமிழ்மொழி தமிழினம் தமிழ்நாடு என்னும் உணர்ச்சி பல்வேறு நிலைகளில் யாண்டும் பரவுவதாயிற்று.

முன்னைவிட இப்பொழுது கல்வி நிறுவனங்களின் எண்ணிக்கையும் கற்றவர் தொகையும் பலப்பல மடங்கு பெருகியுள்ளன. அதற்கேற்பத் தமிழ்ப் புலவர்களும் பேராசிரியர்களும் ஆயிரக்கணக்கில் பெருகியுள்ளனர். இருந்தாலும் அண்மைக் காலமாக மேற்கூறிய உணர்ச்சியும் எழுச்சியும் மேலும் பெருகாதது மட்டுமன்றி அடங்கி ஒடுங்கிவிட்ட நிலையைப் பார்க்கிறோம்.

**பயிற்சி மொழி :**

தமிழ்நாட்டில் அனைத்துத் துறையிலும் தமிழ் பயிற்சி மொழியாக ஆக்குதற்குத் தக்க முயற்சியில்லை. அதற்கான கலைச்சொற்களை உருவாக்கி நூல்களை வெளியிட நிலையான கலைச்சொல்லாக்கக் குழு அமையவில்லை.

**ஆட்சிமொழி :**

தமிழ்நாட்டின் ஆட்சிமொழியாகத் தமிழ் அறிவிக்கப்பட்டிருப்பினும் அது முழுமையான அளவிற்கு நடைமுறைப்

படுத்தப்படவில்லை. அரசு அதில் மேலும் கவனம் செலுத்துவதோடு ஆட்சிச்சொல் ஆக்கக் குழு நிலையாக இருந்து பணி செய்தல் வேண்டும். கலைச்சொல்லாக்கக்குழு ஆட்சிச்சொல்லாக்கக்குழு ஆகியவற்றை மேற்பார்வை செய்யத் தனிக்குழு ஒன்றும் கட்டாயம் வேண்டும்.

திருக்கோயில் வழிபாடு :

திருக்கோயில்களில் தமிழே வழிபாட்டு மொழியாக விளங்க வேண்டும் என்று முயற்சி மேற்கொள்ளப்பட்டு ஓரளவு நடைமுறைக்கும் வந்தது. ஆனால் அந் நிலை இப்பொழுது மாறி விட்டது. சமயப்பற்றும் தமிழ்ப்பற்றும் உள்ளவர்கள் இதனை எண்ணிப் பார்த்துச் செயற்பட வேண்டும்.

சட்டநூல் ஆக்கக்குழு :

அண்மையில் சட்டநூல்களைத் தமிழில் மொழிபெயர்க்கும் பொருட்டு முன்னாள் உயர் அறமன்ற நடுவர் திரு. மகராசன் அவர்கள் தலைமையில் ஒரு குழு அமைக்கப்பட்டுள்ளது. இது வரவேற்கத் தக்கது. ஆனால் நீதிமன்றங்கள் தமிழில் தீர்ப்புக்கள் வழங்கும் நிலை இன்னும் ஏற்படவில்லை.

இந்தியும் ஆங்கிலமும் :

கடந்த அரை நூற்றாண்டுக் காலமாக நாம் இந்தியின் வல்லாண்மையினை எதிர்த்துக் கொண்டு இருக்கின்றோம். இந்தி மொழியாளர்கள் எப்படியாவது இந்தியை இந்தியாவின் ஒரே ஆட்சி மொழியாக்கி விடவேண்டுமென்று விடாப்பிடியாக இருக்கின்றனர் அறுதியும் இறுதியுமாக இதற்கு முடிவு செய்தல் வேண்டும். ஆங்கிலத்தை நாம் விட்டுவிட முடியாது. உலகத் தொடர்புக்கும் அறிவியல் முதலியவற்றுக்கும் ஆங்கிலம் இன்றியமையாததாகும். இந்தியை ஏற்றுக்கொண்டால் நாம் மும்மொழி படித்துத் தீரவேண்டியவர்களாகவும் இந்தி மொழியார் இருமொழி படிப்பவர்களாகவும் இருக்கும் நிலை உருவாகும். இது பற்றி முன்னரே பற்பல விளக்கங்கள் இருத்தலால் இதனை மேலும் சொல்லவேண்டியதில்லை.

நடுவணரசைச் சேர்ந்த பல்வேறு துறைகளிலும் உள்ள படிவங்கள் முதலியனவற்றில் இந்தியும் ஆங்கிலமும் மட்டுமே இடம் பெற்றுள்ளன. இந்தியும் ஆங்கிலமும் பயிலாது அவ்வம் மாநில மொழிகளை மட்டுமே பயின்றவர்கள் குருடர்களாகி இடர்ப்படுவது சொல்லித் தெரிய வேண்டியதில்லை.

இந்தி ஒரே மொழியன்று என்றும், அது பலப்பல மொழிகளின் கூட்டு என்றும், ஒரு மாநிலத்தவர் பேசும் இந்தி பிற மாநிலத்தவர் விளங்கிக்கொள்ள முடியாத அளவுக்கு வேறுபாடு உடையது என்றும் பிறவாறும் ஆசிரியர் மறைமலையடிகளார் விளக்கியுள்ளார். இந்தியா முழுவதும் சுற்றுதற்கு வாய்ப்புள்ள நாடாளுமன்றத் தமிழக உறுப்பினர்கள் இவ் வுண்மையைத் தக்க சான்றுகளுடன் மக்களுக்கு விளக்கிக் கூறுதல் வேண்டும்.

பழைய ஏடுகள் தொகுப்பு :

தமிழில் இதுகாறும் பல துறைகளில் அச்சிற்கு வாராத தமிழ் நூல்கள் பல ஏட்டு வடிவில் உள்ளன. அவற்றை வெளிப்படுத்தி அச்சிடுவதில் தமிழறிஞர்கள் அக்கறை கொள்ளுதல் வேண்டும்.

சொற் பொருள் திரட்டல் :

தமிழ் நாட்டிலும் பண்டு தமிழ் வழங்கிய கேரளம், ஆந்திரம், கருநாடகம் முதலிய நிலப்பகுதிகளிலும், மற்றும் தமிழ் மக்கள் வாழும் அயல் நாடுகளிலும் வழங்கும் கலைச்சொற்கள், பழமொழிகள், உவமைகள், மரபுத் தொடர்கள், விடுகதைகள் முதலியவற்றைத் தொகுத்து முறைப்படுத்தி வெளியிடுவது தமிழுக்குச் செய்யவேண்டிய இன்றியமையா அரும்பணியாகும்.

ஆக்கப்பணிசெய ஆர்வமில்லை :

தமிழ் வளர்ச்சி, தமிழ்க்காப்பு முதலியவற்றை நோக்கமாகக் கொண்ட எத்தனையோ கழகங்கள், மன்றங்கள், கட்சிகள் முதலிய நிறுவனங்கள் இருக்கின்றன. இவையெல்லாம் நடத்தும் இலக்கியக் கூட்டங்ளில், கவியரங்கம், பட்டிமன்றங்களில் ஆர்வம் காட்டும் அளவிற்கு நிலையான ஆக்கப்பணிகளைச் செய்வதில் அக்கறை கொள்வதில்லை.

தமிழ்ப்பெயர்கள் :

ஊர்ப்பெயர், தெருப்பெயர், இல்லப்பெயர், மக்கட்பெயர் யாவும் தமிழ்ப்பெயர்களாகவே இருத்தல் வேண்டும். சிலர் தமிழ்ப்பெயரிலும் தந்தை பெயரைக் குறிப்பதற்கு ஆங்கில முன்னெழுத்தை எழுதுகின்றனர். இதனைக் கைவிட வேண்டும்.

ஒவ்வொரு தமிழனும் தன் வீட்டிற்கு ஒரு தமிழ்ப் பெயரைச் சூட்டிப் பெயர்ப் பலகையினை முகப்பில் பதித்தல் வேண்டும்.

வணிக திறுவனங்களின் பெயர்ப் பலகைகள், விளம்பரங்கள் யாவும் தமிழில் அமையவேண்டும். அவ்வகையில் தமிழறிஞர்கள் ஊக்கத்துடன் செயல்படவேண்டும்.

தமிழ் மக்கள் திருமணம் முதலியவற்றுக்கான அழைப்பிதழ்களைத் தமிழில் மட்டுமே அச்சிடுவது போதுமானது. சிலர் தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளியிட்டு வருகின்றனர். அது தேவையற்றது.

**தமிழறிஞர் கடமை:**

தமிழ் கற்றவர்கள் யாவருமே வறியநிலையினர் அல்லர். வளமுடையவர்கள் தமிழ்ப்பணியைத் தொண்டாகச் செய்ய முன் வருதல் வேண்டும்.

மறைத்திரு மறைமலையடிகளார் அவர்கள் இறுதிவரையில் அயராது பணியாற்றிவந்தார்கள். பற்பல துறைகளிலும் தமிழர் முன்னேற்றத்திற்கு வழிகாட்டியுள்ளார்கள். திருப்பெருந்திரு ஆறுமுகநாவலர், பண்டாரகர் உ. வே. சாமிநாத ஐயர், பண்டாரகர் வ. சு. செங்கல்வராயர் முதலியோர் தனித்து நின்று செய்துள்ள அரும்பணிகள் அளவிடற்பாலனவோ?

தமிழறிஞர்கள் யாதாயினும் ஒரு வேற்று மொழியையும் கலையையும் பயின்று தமிழ் பரப்பவும், தமிழுக்கு வளஞ்சேர்க்கவும் வேண்டும் என்று உறுதி எடுத்துக்கொண்டு உழைத்தல் வேண்டும்.

**எச்சரிக்கை:**

தமிழுக்குக் கேடு சூழ்வோர் அன்றும் இருந்தனர். இன்றும் இருக்கின்றனர். எனவே தமிழறிஞர்கள் தமிழுக்கு ஆக்கந் தேடுவதோடு தமிழ்ப் பாதுகாப்பிலும் முனைந்து செயற்படுதல் இன்றியமையாததாகும். அதற்கு அடிப்படையாகத் தமிழ்ப் பகை என்னுங் களையெடுத்தல் வேண்டும்.

வலுவான அரசியற் கட்சிகள் ஒன்றும் பலவும் மோதிக் கொண்டிருக்கும்போது நாட்டில் அமைதியற்ற சூழல் நிலவுவது இயல்பு. அதனால் தமிழுணர்வாளர்கள் மேற்படி நிலைகளை எண்ணி ஆக்க வினைகளில் ஊக்கத்துடன் செயற்படுவார்களாக!

வ. சு.

# சிவஞானபோத ஆராய்ச்சி

[அருட்டிரு அழகரடிகள்]

(சிலம்பு ௫௨, பரல் ௧௦, ௪௭௬ஆம் பக்கத் தொடர்ச்சி)

சத்தைப் பற்றிய நூலுக்கு 'மறை நூல்' என்று பெயர். உலகம் உயிர் கடவுள் என முப்பொருள்களைப் பற்றியும், அவற்றில் கடவுள் நோக்கில் (அற நோக்கில்) அமைந்து உலக வாழ்வு வாழ்வது பற்றியும், கடவுளையேயாயினும் அளவைகளாலும் அறிவாலும் ஆராய்ந்து அறியும் கருத்துக்கள் பற்றியும் 'மறை நூலில்' வரும் அசத்தாகிய உலகத்தைப் பற்றியும் சதசத்தாகிய உயிரைப் பற்றியும், வாழ்ந்து கொண்டு வரும் வாழ்க்கையின் ஆராய்ச்சியும், சத்தாகிய சிவத்தைத் தலைமையாகக் கொண்டு நிகழ்வதானால், அது 'மறை நூலே'யாம். எதைப் பற்றிய ஆராய்ச்சியானாலும் அது கடவுள் நோக்கத்தில் நிகழ்வதானால், ஆராய்ச்சிகளெல்லாம் 'மறை நூல்' என்றே முடிக்கப்படும். நூலில் கடவுள் நோக்கம் இல்லையானால் அவை வெறும் பசு பாச நூல்களே! 'மறை நூல்கள்' என்னும் பெருமையை அவை அடையா.

இனி, ஆராய்ச்சிகள் அடங்கிப் 'பதிஞான நுகர்வு' கூடி அந் நுகர்வு பெருகித் தமது முனைப்பவிந்து பாடும் அருள் நூல்களெல்லாம் 'சிறப்பு மறைகள்' எனப்படும். தேவார திருவாசக முதலிய பன்னிரு திருமுறைகளும் அருணகிரிநாதர் திருப்புகழ், பட்டினத்தார் பாடல் போல்வனவும் இத்தகைய சிறப்பு மறைகளே!

முன் சொன்ன பொதுமறை இச் சிறப்பு மறைகளில் அடங்கும். பொதுமை என்பது, சிறப்புக்காகவே உள்ளது. பொதுமை அறிவு நிலை; சிறப்பு ஓரளவு உணர்வு நிலை; அறியாமையைவிடப் பொதுமை மேலானதே; ஆனால் பொதுமை எய்தினோர் சிறப்பை அடைந்தால் மட்டுமே நுகர்ச்சியும் பயனும் கூடுவர். அடிமரம் பொதுமைதான்; அதனில் ஏறினோர், கிளைகளையும் தாவினால் மட்டுமே பழங்களை எளிதில் எய்தலாம். வெறும் 'சமரச' மட்டும் (அடி மரமட்டும்) பெரும் பயன் விளையாது.

'உயிர் வேறு, உயிரற்ற பொருள்கள் வேறு', என்று வேறு பிரித்து உயிரைப்பற்றி மட்டும் அதன் ஆற்றலைக் கூறும்

நூலானால் அது பசுஞான நூலாகும். உயிர், தன்முனைப்புடன் எதை அறிந்தாலும் அதைப் பசுஞானம் என்பது மரபு. உலகப் பொருள்களை அறிவதையும் உயிர் தன்முனைப்பாய் அறிவதையும் விடுத்துச் சிவத்தின் அருளால் உணர்வதானால் மட்டும் அது 'சிவஞானம்' எனப்படும். சிவத்தை நூல்களால் அறிவது பொது. ஆதலால் பாசஞான பசுஞானங்கள் இரண்டும் உயிர்க்குத் தூலத் தன்மையே தரும்; தன்முனைப்பாலன்றி ஓரளவு அருள் ஞானத்தால் உணரும் சிவஞானநிலை சிறப்பெனப்படுகின்ற நுட்பநிலையாகும். சிவஞானம் முறுகிவிட்ட பெரிய நிலையில் அது 'மிகு நுட்பநிலை' எனப்படும்; பொது மறை, சிறப்பு மறைகட்கும், மேலான நிலை; திருச்சிற்றம்பல நிலை!

ஐம்பொறிகளாகிய வேடர்களிடத்தில் அகப்பட்டுக் கொண்டு வளர்ந்து உயிர் தன் சிறப்புக்களை மறந்துவிட்டது; உயிர்க்குள் கடவுள் மறைந்திருந்தார். பசு பாசங்களின் மூலம் அறிவு பெருக்கி வந்தார்; பக்குவம் கூடியபின், குரு வடிவில் அவர் எழுந்தருளி எதிர்ப்பட்டார். எதிர்ப்பட்ட இறைவன் தன் பதிஞானம் வழங்கினார். உயிர் இது வரையிற் செய்துவந்த புண்ணியங்களின் முதிர்ச்சியால் இப்போது பக்குவம் எய்திவிட்டது. பொறிகள் முதலாகிய கருவிகளையும் உலகத்தையும் தன்முனைப்பையும் விட்டு, உயிர் விடுதலையாகிக், கடவுளும் தானும் ஞானம் காரணமாக ஓர் இனமாய் இருத்தலால் உரிமையுடன் ஆண்டவன் அருள் நெறி வழியே அது தொடர்ந்து செல்லுவதாயிற்று! இது நூற்பாவின் கருத்து.

நூற்பாவில் வரும் புலன் என்பது பொறியை உணர்த்துதலால் உரையாசிரியர் அதனை 'ஆகு பெயர்' என்றார்; 'ஐம் பொறி வேடரின்' என்பது, 'ஐம்புல வேடரின்' என்று வந்தது; பொறிகள் உலகத்தைப் புலன்களின் வாயிலாகவே சுவைத்தலின், அவ் வாயில் தோன்ற அவ்வாறு ஆசிரியர் விளக்கினார்.

பொறிகளை வேடராக உருவகப்படுத்தினமையாலும்' 'வளர்ந்து' என மேலே வருவதனாலும், 'உயிரை ஒரு குழந்தையாக எண்ணவேண்டியிருக்கிறது. அக் குழந்தை சிறுவயதிலிருந்தே வேடரிடம் வளர்ந்து வந்ததனால், தன் நிலையை மறந்திருக்கவேண்டும். 'அயர்ந்தனை' என்னும் குறிப்பு இதனை உணர்த்தும். வேடரின் பழக்கவழக்கங்களை அது, மேற்கொண்டிருக்கவேண்டும்.

அப்படியானால், உருவத் தோற்றமும் வேடர்களைப் போலாகித் தொழிலும் அவர்களுடையதாய் மாறி, வேடர்

நிலையே மிகுந்துவிட்டிருக்கவேண்டும்; முன் நிலைமையைச் சொன்னால், இப்போது கேட்பதற்கு ஏற்றபடி, குழந்தை ஓரளவு இளைஞனாகவும் வளர்ந்திருக்கவேண்டும். வேடர் காடுகளில் இருப்பவர். ஆதலால், முன் நிலைமையில் குழந்தை நாட்டில் நாகரிகமாய் இருந்திருக்கவேண்டும் எனவும், பெற்றோர்க்குத் தெரியாமல் வேடரிடம் சிக்கியிருக்கவேண்டும் எனவும், முன் நிலைமை உயர்ந்தது எனவும் அறிந்துகொள்ளலாம்.

மீண்டும் வந்து தந்தை அழைத்துச் செல்வதனால், அது தந்தையின் இறுதிக் காலமாகவும் தன் நிலைகளைத் தனயனுக்கு ஒப்புவிக்க விரும்புவதாகவும் இருக்கவேண்டும். அப்படியானால், உயர்ந்த வகையிற் கூறும்போது, தந்தையே ஒரு மன்னவனாக வும் மகன் மன்னவ குமாரனாகவும் அறிந்து கொள்ளவும் முடியும்; இவ்வளவும், பொறிகளை வேடராக உருவகப்படுத்திய ஓர் உரு வகத்தால் தெரிந்தன.

அசத்தில் அகப்பட்டு அஃதாவது அறியாமையில் அகப்பட்டு வருந்தும் ஓர் உயிரைச், சத்து என்னும் சிவம், அந்த அறியாமை நிலையிலிருந்து விடுதலை செய்யும் கருத்தால், தனது சொல்லைக் கேட்கத் தகுந்த புண்ணிய முதிர்ச்சியின்போது எதிர்ப்பட்டு வந்து சொல்ல, அதனால் உயிர் சிவஞானம் மேலிட்டெழுந்து, சிவத்தின் அருள் வழியே செல்லுவதாயிற்று.

இங்கே ஆண்டவனைக் கூறும் ஆசிரியர், வேடரின் நிலையை அரித்து மீட்டலால், 'அரன்' என்னும் பெயராற் கூறினார். அரன் கழல் என்பது, அரன் அருள்; செலும், செல்லும்; செல்லும் மாற்றத்தைச் 'செலும்' என்றார். 'அந்நியமின்மை யின்' என்றது, ஓர் இனம் என்னும் பொருட்டு; இப்படி ஒன்று தற்குரிய காரணத்தால், 'இன்' காரணப் பொருளில் வந்தது.

இதுகாறும் அறியாமைப் பொருள்களின் வாயிலாக உயிர்க்கு அறிவை மறைந்து விளக்கிவந்த முதல்வன் என் பதற்கு 'முதல்' என்றும், தம்மோடு இனமான உயிர் என்ப தற்குத் 'தம் முதல்' என்றும், ஆசிரியர் கூறினார். அதனால் உயிர் 'தமக்குப் புதல்வன்' என்று இறைவன் கருதிய உரிமையும் தெரிகிறது. இறைவன் தந்தையானான். தந்தையே நேரில் வந்து இங்கே பதிஞானத்தை வழங்குதலால் அவர் குருவும் ஆனார். குருவும் என்னும் உம்மை இவ்வாற்றால் இறந்தது தழீஇயதொடு, சிறப்புமாயிற்று.

இச் சிறப்பு நிலையில் தந்தை ஒரு மன்னன் என்று தெரித லால் அவர்க்கு 'வெண்கொற்றக் குடையும்' 'சுடர் முடியும்' 'சிம்

மாதனமும்' உரியவாயின. உயிர் என்னும் புதல்வனுக்குத் தந்தையின் அச் செல்வங்கள் முழுதும் நுகர்வதற்கேற்ற உரிமையும், தந்தையோடு தானும் பொதுவாக அறிவுடைப் பொருளாதலால் ஓர் இனமாதலும் அறியலாம்.

நூற்பாவில் வேடர் என்றே பொறிகள் வெளிப்படையாய் உருவகப்படுத்தப்பட்டமையால், அந்த மன்னவ புதல்வனை அவை சேராதபடி செய்ய நேர்ந்தது. சிறு குழந்தையிலேயே தெரியாமல் எடுத்துவந்து வளர்த்துத் தமது ஆறலைக்கும் தொழிலைப் பயிற்றிச் சிறுமையுறுத்தி இழிதொழிலில் நிறுத்திய நிலைமையும் நன்கு தெரிகிறது.

மன்னவனை நினையுங்கால், 'வெண்கொற்றக் குடை' என்பது பேரறிவு நிலையையும், 'சுடர்முடி' நடுவு நிலையையும், 'சிம்மாதனம்' ஆட்சி நிலையையும் குறிக்கும்.

மகனுக்கு இவற்றை அடையும் உரிமையும் ஓரின ஒற்றுமையும் உண்டு; வேடர் அவற்றை முன்பு இழப்பித்தனர். தந்தை இப்போது சேர்ப்பிக்கின்றார்.

இந் நூற்பா, 'தவத்தினில் உணர்த்த' எனவும், 'தம்முதல் குருவுமாய்' எனவும், 'ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்து' எனவும், 'அன்னியம் இன்மையின் அரன் கழல் செலும்' எனவும், நான்கு பிரிவுகளாக வகுத்து விளக்கப்படுகின்றது.

முதல் பிரிவு :

முற்செய் தவத்தால் ஞானம் நிகழும் என்று இதன் மேற்கோளில் வருகிறது.

ஞானம் உண்டாவதற்கு வகை இதனில் சொல்லப்படுகிறது. தவம் செய்து ஞானம் வரவேண்டும் என்பது கருத்து. சரியை கிரியை யோகம் மூன்றுக்கும் தவம் என்று பெயர். இவற்றின் பயனாக நான்காவதாகிய ஞானம் உண்டாக வேண்டும். ஆகவே தவஞானம் என்று சொன்னால் தவத்தின் பயனாக ஞானம் உண்டானது என்றும், சரியை கிரியை யோகம் ஞானம் நான்கும் அத் தொடரில் அடங்கிவிடும் என்றும், ஞானமுடையோரும் மேன்மேல் தவங்களைச் செய்துகொண்டிருப்பர் என்றும் அறிந்துகொள்ளலாம்.

நூற்பாவில் 'தவத்தினில் உணர்த்த' என்று வருவதனாலும், அதனை இம் முதற்பிரிவு ஏற்றுக்கொண்டிருப்பதனாலும், சரியை

கிரியை யோகம் மூன்றும் செய்து தவம் நிரம்பிப் பக்குவ முதிர்ச்சி (இருவினை யொப்பும் மல பரிபாகமும்) பெற்றிருந்தால் அந்த மலர்ச்சியில் குருதோன்றி ஞானம் உணர்த்துவார் (சத்தி நிபாதம்) என்று தெரிகிறது. தவ மலர்ச்சி இல்லாவிட்டால் குரு தோன்றமாட்டார், சிவஞானமும் பதியாது. சிவஞானத்தைக் குருவால் அல்லாமல் வேறு வழிகளாற் பெறவும் முடியாது. நானே முயன்று பெறக் கூடியதும் அன்று.

முயற்சி என்பது உயிர்க்குச் சரியை கிரியை யோகங்களில் நிகழ்வதாகும். யோகத்தை முயற்சி என்று கூறுவதும் உண்டு. சரியை கிரியை யோகமென்னும் மூன்றும் நடைபெறுவதே முயற்சியாகும். அதனுல் 'தவமுயற்சி' என்றும் 'யோக முயற்சி' என்றும் முயற்சி சொல்லப்படும். ''முயல்வாருள் எல்லாம் தலை" என்று இல்வாழ்வாரைத் திருவள்ளுவர் கூறுவார். 'தவம் முயல்வாருள் எல்லாம் தலை' என்பது அதன் பொருள். 'அகம் புறம் என்னும் இருவகைப் பற்றுக்களும் நீங்கிச் சிவஞானத்தைச் சேர்ந்து யோகத்தில் முயல்வாருள் எல்லாம் இல்வாழ்வார் தலை' என்று திருவள்ளுவர் இல்வாழ்வாரைச் சிறப்பித்திருக்கிருர். ஆதலால், சரியை கிரியை யோகம் பயில்வாரே, அதில் முதிர்ச்சி அடைவாரே, முயல்வார் எனப் படுவரேயல்லாமல் அவற்றிலும் தன்முனைப்பு மிகுதியால் முயல் வாரை அங்ஙனம் கூறியதாகாது.

இதிலும் ஒரு வேறுபாட்டை நுணுகி அறியவேண்டும். மக்கள் தொண்டே இறைவன் தொண்டு என்று கூறப்படு கிறது. இங்கே மக்கள் என்பது பொதுமக்களை அன்று 'அடியார்' அல்லது ஞானிகளாகிய சிறப்பு மக்களை உணர்த்தும்.

பொதுமக்களின் தொண்டுகளைச் செய்வது, முயற்சி அன்று அவை எளிய செயல்களாலேயே செய்து முடிக்கக் கூடியவை. அவற்றைப் பெரிதாக்கிக்கொண்டு இக் காலத்தவர், எல்லா வற்றிலும் ஈடுபடுகிருர்கள்; துன்பம் நீங்கியபடியாயில்லை. ஒரு துன்பம் போனுல் மற்றொரு துன்பம் வருகிறது.

பொதுமக்களுக்கு ஆவனசெய்வது பொதுநிலை; அடியார் பெருமக்களுக்கும் இறைவனுக்கும் செய்யும் தொண்டுகளை 'முயற்சி' என்பது; சரியை கிரியை யோகம் என்னும் தவத் தைச் செய்தால் மட்டுந்தான் மலர்ச்சி உண்டாகும். ஞானம் பெறுவதற்கு ஏற்றநிலை தோன்றும். இது, சிறப்புநிலை.

"நடமாடக் கோயில் நம்பர்க்கு. ஒன்று ஈயில் படமாடக் கோயில் பகவற்க தாமே" என்னும் திருமந்திரத்தில், 'நம்பர்'

என்பவர் அடியாராவார். "ஞானி பகலூண் பலத்துக்கு நிகரில்லை" எனவும், "நீறிடும் தொண்டர் நினைவின் பயனிலே பேறு எனில் ஒரு பிடி பேறது வாகுமே" எனவும், "தபோதனர் தாம் மகிழ்ந்து உண்டது மூன்று புவனமும் உண்டது" எனவும் வருகின்ற திருமந்திரத் திருமொழிகள் இங்கே சிந்தித்தற் குரியன.

இத்தகைய சரியை கிரியை யோகம் என்னும் தவ முயற்சிகள் செய்து பக்குவ மலர்ச்சி பெறுவதென்பது ஒரு பிறவியில் நிகழக்கூடியதன்று; அதனால் முற்பிறவிகளிற் சிறிது சிறிதாகச் செய்து சேர்த்து வந்த தவங்களால் என்று ஆசிரியரும் கூறினர்.

சிவஞான முனிவர் 'இது வெளிப்படை' என்று கூறுமிடங்களிலெல்லாம், படிப்பவர்க்கு விளக்கம் உண்டாகும் வகையில் திருவாவடுதுறை சுப்பிரமணிய தேசிகர் தெளிவு உரை கூறி வரும் நிலையில், இந்த எட்டாம் நூற்பாவின் முதல்பிரிவின் மேற்கோளுக்கும் உரை வகுக்கிறர். 'படிமுறையானன்றி, இவ்வொரு பிறவியில் செய் தவத்தான் அமையாது, முற்பிறவிகளிலே செய்து வந்த தவமாகிய சரியை கிரியை யோக விசேடத்தால்' என்று அவர் கூறுவதும் நினைவு கூரப்படும். சரியை முற்றுப் பெறுவதற்கே பல பிறவிகளாகும். அதற்கு மேலானவை கிரியை யோகங்கள் என்றால், அவையெல்லாம் ஒரு பிறவியிலேயே நிறைவு கொள்ளுதலாகுமா? ஆதலால், ஞானம் தெளிவிக்கும் குரு வருகையை உண்டாக்கக் கூடிய பக்குவ மலர்ச்சி, அத்துணை எளிய வகையில் கிடைப்பது அரிது.

விடுபேற்றை அடைய இத் தவமுயற்சிகள் போதுமே, குரு வருவதும் ஞானம் பெறுவதும் எதற்கு? என்றும் ஓர் எண்ணம் தோன்றும். ஞானத்தால் வீடடைதல் கூடுமல்லது தவங்களால் கூடாது. ஆதலால் குரு வந்து ஞானம் உணர்த்தினர் என்று ஒரு காரணம் ஆசிரியர் கூறினர். இதற்கு அமைந்த அவர் வாக்கு,

"மேற் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோட்சத்தைக் கொடானாகலான் என்பது. இதனில் 'மேல்' என்பது முற்பிறவிகளில் என்னும் பொருட்டு; நன்னெறியாகிய ஞானம் என்று இருபெயரொட்டாக ஆசிரியர் விளக்கியது 'சன்மார்க்கமாகிய ஞானம்' என்னும் பொருட்டு; ஞானத்தைத் தான் 'சன்மார்க்கம்' என்று எல்லாரும் சொல்லுவார்கள். வாழையடி

வாழையாக வந்த வடலூர் வள்ளலாரும், அவர்க்கு முன் தோன்றிய தாயுமானவரும், 'சன்மார்க்கம்' என்றது, ஞானத்தையே. வீடுபேற்றுக்கு அதாவது விடுதலைக்கு, அஞ்ஞான விடுதலைக்கு, அறியாமை விடுதலைக்கு, ஞானம் கதி காட்டுமேயல்லாமல் வேறு எவை வழிகாட்டமுடியும்? அந்த ஞானத்தைப் பெறுவதற்காக மற்ற உலக நிகழ்ச்சிகளைவிடச் சரியை கிரியை யோகங்கள் உரியவாயின. பொதுமக்களுக்குத் தொண்டாற்றுதல், அடியார்க்குத் தொண்டாற்றக்கூடிய சரியை கிரியை யோக முயற்சிகளாகிய தொண்டுகளோடு, தானே நிகழ்ந்து வரும்.

பொதுமக்கள் என்பவர்கள், இங்கே தகுதி அறியாதவர்கள், ஏழைகள், மாட்டாதவர்கள். ஊனமுள்ளவர்கள் முதலியோர்; அவர்களுக்குத் தொண்டு செய்வது எளிது, வெறும் முயற்சி கூட அவ்வளவாகத் தேவையில்லை. பொதுமக்களில் ஏனையோர், உலகப் பொருள்களில் நாட்டமுடையோராதலின் பெரும்பாலும் அவரவரே வாழ்க்கை நலம் எய்துவர். முத்தி நலம் அறியாதவர்கள் செம்மை நலம் அறியாதவர்கள் 'மூர்க்கர்' எனவும் 'சிதடர்' எனவும் மாணிக்கவாசகர் இழிவாகக் கொள்வார்; அவரோடு இணங்கலாகாது; கண்டு கேட்டு உரைத்து ஏதாவது உதவி செய்துவிடலாம். முயல்வது, இறைவனோடும் அடியாரோடுந்தாம்; ஆதலால் உலகப் பற்றிலிருந்து கழன்று, பொறிபுலன் முதலிய கருவிகளின் வேகம் கெடுத்து அடக்கிச், சரியை கிரியை யோகங்களாகிய நன்முயற்சிகளைச் செய்துவரவேண்டும். அதனால் பக்குவம் முதிரும். 'தபுத்தல்', 'அடக்குதல்' அது 'தபம்' 'தவம்' என்றாயிற்று. உலக நிகழ்ச்சிகளில் தொண்டர்கள் பெறுகின்ற அடக்கமே, தெய்வத் திருவள்ளுவரால்,

> "உற்றநோய் நோன்றல், உயிர்க்கு உறுகண் செய்யாமை,
> அற்றே தவத்திற்கு உரு"

எனப்பட்டது.

நோய் நோன்றலிலும், உறுகண் செய்யாமையிலும் செயல் நிகழ்ச்சிகள் எவையும் இல்லை; அதனால் அவை 'தவத்'தின் அடையாள உரு ஆயின. இந்த மோனநிலையை எய்தினால், ஞானநிலையை எளிதில் அடையலாம். இந்த மோனநிலைதான் 'பக்குவம்' என்பது; அந் நிலையில் நமக்கு முயற்சிகளாயுள்ள சரியை கிரியை யோகங்களாகிய செயல்களும், முயற்சியாய்த் தெரியாமல் இயல்பாகவே நடைபெற்று வரும். இயல்பாகும் இந்த நோன்புக்குத் தேவை என்பது ஒன்றுமில்லை.

சிறுபோதிலிருந்தே வேடரிற் சிக்கிய மகனுக்குத் தவ முயற்சிகள் முற்பிறவிகளிலேதாம் நிகழ்ந்திருக்கவேண்டும் என்பது வெளிப்படை. இப் பிறவியிலேதான் அச் சிறுவன் வேடரிடையில் அகப்பட்டு ஆறலைத்துக் கொண்டிருக்கிருனே! இங்ஙனமே, திருஞானசம்பந்தக் குழந்தையும் முற்பிறவிகளில் சரியை கிரியை யோகம் செய்து பக்குவ மலர்ச்சி பெற்றிருந்த தால், அப் 'பிரளயாகலர்', குழந்தைப் பருவத்திலேயே ஞானம் கிடைத்து ஞானசம்பந்தர் ஆயினர். அதனுல் அவர்க்குப் பிறவியில் இன்னல்கள் இல்லை.

உலக நிகழ்ச்சிகள் இறைவன் பொறுப்பில் நடைபெறுத லால், அப்பர் அடிகள், 'தன் கடன் அடியேனையும் தாங்குதல்' என்று திருவாய் மலர்ந்தார். அடுத்துச், சரியை கிரியை யோகங்களாகிய பணிகளைச் செய்வதே தம் முயற்சிகள் என்று, பக்குவம் பெற்றவராதலால், 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்று தெளிவித்தார். இங்கே 'பணி' என்றது, இறைவனுக்கும் சான்ருேர்க்கும் செய்யும் தொண்டுகள்; ஏனென்ருல், இருநிலையினரும் தந்நலம் அற்றவர்கள்!

குரு எதிர்ப்பட்டால், உயிர் 'இத்தகையது' என்னும் உரிமையையும் அறிவின் இனமாதலையும் உணர்த்தித் தனது சிவ ஞானப் பதத்துத் திசை திருப்புவார். 'ஞானம், சரியை கிரியை யோகங்களால் தானே விளையுமே, குரு எதிர்ப்பட்டுத் தான் ஞானம் எழ வேண்டுமா?' என்னுங் கேள்விக்கு இது விடை. அந்நிலையில் உரிமையும் இனவொற்றுமையுந் தெரிவிக்கத் துணையிருக்கவும், நிலைத்தலில் எழுச்சியுண்டாக்கவும், மலத்தைத் தீய்க்கவும் மெய்ம்மையைத் தெளிவிக்கவும் பெரியோர் உதவி தேவை; எதையும், அறிவிக்கவே உயிர் அறியும்;

வேடர் தொடர்பைத் தீய்த்து அறுத்துக் குரு தன் வழியில் திருப்புதல் வேண்டும். ஞானம் என்னும் தெளிவைத் தெளிவிக்க வேண்டும்; தீக்கை என்பது, மலங்களின் வல்லமைகளையும் பொசுக்கி ஞானத்தைப் பெறுவிப்பது, இது, சத்தைப் பற்றிய 'மார்க்க'மாதலால், 'சன்மார்க்கம்' எனப்பட்டது.

(தொடரும்)

# முருகன் தீம்புனல் அலைவாய்

[பேராசிரியர் கோ. வே. பெருமாள், எம்.ஏ., பி.டி.,]

(முன் சருக-ஆம் பக்கத் தொடர்ச்சி)

‘பொதிகைமலைக் காடு’ என்று வைத்துக் கொள்வோமே! அங்கே, சிங்கம், புலி, சிறுத்தை, யானை, கரடி முதலிய கொடிய காட்டு விலங்குகள் உண்டு; சுனை, நீரூற்று, ஆறு முதலிய நீர் நிலைகள் உண்டு! அங்கே வீரம் செறிந்த காளையர் வேட்டையாட வருவதும் உண்டு. மனப் பெருந்தன்மையும், உடல்வலிமை உரனும் ஆண்மகனின் இயல்பு என்பர்! “பெருமையும் உரனும் ஆடூஉ மேன”[13] அல்லவா? ஒரு முறை தலைவியின் போக்கிலும், நோக்கிலும் வேறுபாடு தோன்றியது. ஆதலின், தோழிக்குத் தலைவிமீது ஐயம் எழுந்தது! எனவே, தோழி தன் ஆராய்ச்சியைத் தலைவிமீது செலுத்துகின்றாள். ஏனெனில், தலைவி, தன் இயல்பிலே பிறழுங்கால், அவளை நன்னெறிப்படுத்த வேண்டிய நாட்டம் (பொறுப்பு), தோழிக்கு உண்டு. இதனால், தோழி, அறத்தொடு நிற்றற்குரிய அடிப்படை ஆர்வத்தைப் புலப்படுத்தும் வினா விடைகளை, தலைவியிடம், மதியுடன் படும்வரை விடுப்பாள். சான்று:

> “தொய்யில் வனமுலையும் தோளும் கவின்எய்தித்
> தெய்வம் கமழுமால் ஐம்பாலும்—ஐயுறுவல்
> பொன்னங் கொடிமருங்குல் பூங்கயல் கண்ணினாய்க்(கு)
> என்னை இதுவந்த வாறு?”[14]

இவ்வாறு, தலைவியை மதியுடம்படுக்குந் துணையும், தோழி வழிநிலை பிழையாமல் கவர் பொருளாக—இரட்டுற மொழிந்து—நெறிபடு நாட்டமாக வினவினாள்! அதற்குத் தலைவி, “அங்கே ஒரு நீர்ச்சுனையிலே நீராடினேன்; ஆதலின், இவ்வாறு ஆயிற்று” என்றாள்! அது கேட்ட தோழி, “யானும் அவ்வாறே நீராடிப் பார்க்கலாமோ?” என்றாள். இதனைச் சிறுகதையொன்று மொழிவதுபோலச் சொல்கின்றாள்:

---

13. தொல்காப்பியம் மூலம்; கழக வெளியீடு - கூசச நூற்பா-1044. (பொருள் - களவியல்; எ.)

14. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - நச்சினார்க்கினியம் - களவியல்; பக்கம் - 496. ச. பவானந்தம் பிள்ளை பதிப்பு (சென்னை 1916).

"கொடுமை வாய்ந்த சிங்கம் ஒன்றை, ஓர் ஆண் யானை (களிறு) கண்டு அஞ்சியது; சீற்றம் பொங்கியது! அதுகண்ட பெண் யானை (பிடி) தன் குட்டி யானையைத் தழுவியவாறே துயரம் கொண்டது! அந்தக் கடுங்கண் களிறு, கரடு முரடான சந்தன மரத்தின் அடிப்பகுதியிலே, தன் அழகிய வெள்ளைத் தந்தங்கள் பதிந்து தங்குமாறு குத்தியது; அந்தச் சந்தனப் பொதியத் தடவரைக் காட்டைக் கடந்தது! அவ்வாறு கடக்குங் கால், அந்த வீரம் மிகுந்த யானையின் விரைந்த செல்கையால், அதன் கால்கள் எற்றி மிதிபட்டு, அம் மலைச் சாரல் வரம்பு இடிந்து, விழுந்தது! இவ்வாறு, பொதிய மலைக் காட்டிலே புரட்சி இயங்கிக்கொண்டிருந்தது! இந் நேரத்தில், ஓர் ஆழமான குளிர்ந்த மலைச் சுனையிலே, ஒரு தலைவி தன் அழகிய வளையல்கள் ஒலிக்குமாறு நீராடிக் கொண்டிருந்தாள்! இதனைக் கண்ட அவள் தோழி, ஓர் அழகு மயில் போன்ற ஆரணங்கு வாய்த்தால், தலைவியே! உன்னைப் போல நானும் வளையல்கள் ஒலிக்க நீராடட்டுமா?" இவ்வாறு, ஒரு தோழி, தன் தலைவியிடம் வேண்டுவதாக, அப் பாடல் கருத்து அமைந்துள்ளது. இஃதோ, அப் பாடல்;[15]

"பையுள் மாலைப் பழுமரம் படரிய
நொவ்வுப்பறை வாவல் நோன்சிற(கு) ஏய்க்கும்
மடிசெவிக் குழவி தழீஇப், பைபாந்(து)
இடுகவுள் மடப்பிடி எவ்வங் கூர,
வெந்திறல் ஆளி வெரீஇச், சந்தின்
பொரியரை மிளிரக் குத்தி, வான்கேழ்
உருவ வெண்கோடு உயக்கொண்டு கழியும்
கடுங்கண் யானை காலுற ஒற்றலின்
கோவா வாரம் வீழ்ந்தெனக், குளிர்கொண்டு
பேஎ நாறும் தாழ்நீர்ப் பனிச்சுனை

15. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - நச்சினார்க்கினியம் - ச. பவானந்தம் பிள்ளை பதிப்பு (சென்னை 1916) களவியல்; பக்கம் - 407.

[பையுள் மாலை=துயரம் மிகுந்த மாலைப் பொழுதிலே; நொவ்வுப் பறை வாவல்=மெலிந்த சிறகினை உடைய வௌவால்; ஏய்க்கும்= போன்ற, உவம உருபு. பைபாந்து=வருந்தி; கவுள்=கன்னம்; எவ்வம் கூர=துயரம் மிக. ஆளி=சிங்கம். சந்தின் பொரியரை=சந்தன மரத்தின் கரடு முரடான அடிப்பகுதி. வான்கேழ் உருவ வெண்கோடு= மேலான நிறத்தினை உடைய அழகிய வெள்ளைத் தந்தம். கழியும்= நீங்கும்; ஒற்றலின்=எற்றலின்; கோவா வாரம்=மலைச்சாரல் வரம்பு; பேஎ நாறும் தாழ்நீர்ப் பனிச்சுனை=அச்சம் பொருந்திய ஆழம் மிகுந்த குளிர்ந்த குளம்].

கோனேர் எல்வளை தெளிர்ப்ப, வின்போல்
யானும் ஆடிக் காண்கோ? தோழி!
... ... ... ...
கமழ்பூம் புறவில் கார்பெற்றுக் களித்த
ஒண்பொறி மஞ்ஞை போல்வதோர்
கண்கவர் காரிகை பெறுதல்உண்(டு) எனினே!''

இப் பாடலின் கருப்பொருள்களின்[16] வழியே, ஓர் 'உள்ளுறை உவமம்' அமைந்துள்ள உவகையினை, உய்த்துணர்ந்து பார்க்கலாம். அதன் மேலும் ஒரு நுண்பொருள் இலங்குவதை நோக்கலாம். இதனையே, 'இறைச்சிப் பொருள்' என்று இயம்புவர்! 'கருப்பொருள் பிறக்கும் இறைச்சிப் பொருளே'[17] என்று 'அகப் பொருள் விளக்கம்' அறிவிக்கின்றது! தலைவியின் காதல் உண்மையைத் தெளிவு படுத்திக் கொள்வதற்காக, தோழி, ஓர் 'உள்ளுறை உவமை'யையும், அதன் வழியே ஓர் 'இறைச்சிப் பொருள் துலக்கத்தை'யும் படைத்து மொழிகின்றாள். அவற்றை இங்கே சிந்திக்கலாம்:

'வெந்திறல் ஆளி (சிங்கம்) குகையினின்றும் வெளிப்படுகின்றது!' இதுபோலத் 'தலைவியின் களவு ஒழுக்கம்' அலராக—கவ்வையாக வெளிப்பட்டு விடுகின்றது! 'களிறு வெருவிச் சீற்றம் கொள்கின்றது!' குடும்பத்தலைவன் ஆகிய தந்தை நாணத்தால் சாம்பி, சீற்றம் கொள்கின்றான்! இது கண்டு, 'இடுகுகவுள் மடப்பிடி, வருந்தித் துயரம் மிகுந்தது, ஆயினும், வௌவால் சிறகுபோலத் தொங்கும் காதுகளை உடைய குட்டி யானையைத் தழுவிக் கொள்கின்றது.' முகஞ் சுருங்கிய நற்றாயோ, வருந்தித் துயரம் மிகுகின்றாள்; ஆயினும் தான் பெற்ற மகளை—தலைவியை—அரவணைத்துக் கொள்ளவே ஆவல் கொள்கின்றாள்! 'களிறோ, சந்தன மரத்தின் காழ் மூரடான அடிப்பகுதியைத் தெளிவாகவே குத்தி, தன் தந்தங்களைப் பதிவித்துச் சென்று விடுகின்றது' தந்தையோ, தன்

16. தொல்காப்பியம் அகத்திணை இயலில், 'முல்லை, குறிஞ்சி பாலை, மருதம், நெய்தல்' என நிலம் ஐந்திணைகளாகப் பகுத்து உணர்த்தப் பெற்றுள்ளது. இவை ஒவ்வொன்றிற்கும், 'முதல், கரு, உரிப்பொருள் என்ற மூன்று' கருத்துக்கள் உண்டு. நிலமும் பொழுதும் முதற்பொருள்; பறவை, விலங்கு, மரம், தொழில் முதலியன கருப்பொருள்; புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் முதலிய நிகழ்ச்சிகள் உரிப்பொருள் என்ப.

17. நாற்கவிராச நம்பி - அகப்பொருள் விளக்கம்; நூற்பா - ௨௨௭; கழக வெளியீடு - ௨௨௮.

மகளுக்கு ஏற்பாடு செய்திருந்த திருமண வரைவினைச் சிதைத்து வெறுப்பையே வெளிப்படுத்திவிட்டு, வீட்டை விட்டு வெளியேறுகின்றான்! 'காட்டினின்றும் கழியும் கடுங்கண் யானை, காலுற ஒற்றலின் கோவா வாரம் (மலைச்சாரல் வரம்பு) வீழ்ந்துவிடுகின்றது' இதுபோல, கடுஞ்சினமுற்ற தந்தை வெறுத்து நீங்கியதால், அந்தச் செல்வக் குடியின் அமைதி கெட்டுவிடுகின்றது!

இதனைக் கேள்வியுற்ற தலைவி அஞ்சி, தன் களவுக் காதலைத் தோழியிடம் வெளிப்படுத்திவிட இயலும்! இது, தலைவியின் காதல் மணத்தினை, கண்ணியமான முறையிலே நடத்துவதற்கு வழிவகுக்கும். தோழி செவிலித் தாயிடமும், செவிலித்தாய் நற்றாயிடமும், நற்றாய் தந்தையிடமும் அறத்தொடு நிற்றற்கு ஆயத்தம் செய்ய உதவும். எனவே, தோழி தலைவியிடம் இறுதியாக வேண்டுகின்றாள்:

"திருச்செந்தூரின் பூக்கள் மணக்கும் புறவிலே (முல்லை நிலத்திலே), கார்கண்டு களிப்புறும் தோகை மயில் போலக் கண்கவரும் காரிகை (மணப்பெண்) வாய்ப்பாளாயின், உன்னைப் போல நானும், தோழி! குளிர்ச்சியும் அச்சமும் ஆழமும் உள்ள அப் பனிச்சுனையிலே, அழகு மிக்க ஒளி வளையல்கள் ஆரவாரம் செய்யுமாறு, நீராடி மகிழலாமோ?" இதுபோல, அழகிய நீ மணக்கோலம் புனைந்தால், ஆரவாரம் வாய்ந்த திருமணத்திற்கு முன் ஏற்பாடுகள் செய்யலாம்! இவ்வாறு, தோழி தலைவியின் களவொழுக்க உண்மையினைக் கண்டறிய முனைகின்றாள். இதன் முழுப்பயன், தலைவி தான் விரும்பிய தலைவனையே திருமணம் செய்து கொள்வதற்கு அறவழி பிறந்து விடுகின்றது. இச் செய்தி, நுட்பமாக உய்த்துணர்ந்துகொள்ளப் பெறுகின்றது. இதனால், பண்டைப் புலவர், அகப்பொருள் அமைந்த பாடலிலே, உள்ளுறை உவமமும், அதன் வழியே இறைச்சிப் பொருளும் அமையுமாறு படைப்பர் என்று உணர்ந்து கொள்கின்றோம். இவை அகப்பொருள் திணைகள் அனைத்திற்கும் உரியன; ஆயினும், குறிஞ்சி, மருதம் ஆகிய இரு திணைகளிலேயே பயின்று வருவனவாம்!

"உவமைப் பொருளும் இறைச்சிப் பொருளும்என்(று)
இருவகைப் பொருளும் எய்தும் அகப் பாட்டினுள்"[18]

இவ்வாறு, மன்பதை வாழ்விலே மாசு தோன்றிவிடக் கூடாது என்ற கவலையால், பழந்தமிழ்ப் புலவர், படைத்து மொழி

18. நாற்கவி ராச நம்பி - அகப்பொருள் விளக்கம்: நூற்பா - ௨௨௮. கழக வெளியீடு - ௧௯௪௮.

கற்பனைப் பாக்களை ஆக்கினர்; பொய்யும் வழுவும் தோன்றாத வாறு பண்பாடு புரந்தனர்; நாகரிகம் பேணினர்.

தீம்புனல் அலைவாய் (திருச்செந்தூர்) :

இஃது, யார் பாடிய பாடலோ? தெரிந்திலேம்! ஆயினும், இப் பாடலைப் படைத்த ஆசிரியர், 'திருச் செந்தூர்ப் பட்டினம்' வந்து வணங்கியவராகவே இருக்க வேண்டும். ஈராயிரம் ஆண்டு களுக்கு முன்னரே, செந்தூர் மாநகரிலே மயில் தோகை விரித்து ஆடியிருக்க வேண்டும்! முல்லை நிலப் புறவு பெற்ற மூதூராகவே மிளிர்ந்திருக்க வேண்டும்!! எனவே, மயில் நினைவு தோன்றிய பொழுதே, மாநகர் அலைவாய் புலவர் மனத்திலே தோன்றியிருக்க வேண்டும். இயற்கை யழகினைக் கண்டு வியந்த தமிழறிஞர், இறைமையின் நுட்பத்தினை இங்கே நுகரத் தொடங்கினர் போலும்! முன்னைப் பெருமக்கள், இங்கே, 'அணங்குடை வரைப்பகம்'—'திருமணி விளக்கு' 'செருமிகு சேய்'—கண்டனர்; தொல்காப்பியரே, "சேயோன் மேய மைவரை உலகு"[19] என்றார்! பின்னர், 'தாழ்நீர், வெண்தலைப் புணரி அலைக்கும் செந்தில், நெடுவேள் நிலைஇய காமர் வியன் துறை' கண்டனர்!

மண்ணும், விண்ணும், செங்கதிரும், வெண்கதிரும், கடலும், மலையும் கண்ட பழங்கால அறிஞர், வியந்தனர்; இந்த உலகம், நிலமும், தீயும், நீரும், காற்றும், வானமும் ஆகிய ஐந்து பெரும் பொருள் (பூதம்)களும் கலந்த மயக்கம் என்று தெளிந்தனர்![20] இந்தப் பார் (நிலம்) முதலிய பூதங்களைத் தனித்தனியே பார்க்குங்கால், பரம்பொருள் ஆகிய இறைவனின் நினைப்பு எழுவதில்லை! எங்கும் நிறைந்த பரம்பொருள் எண்ணம் படரும் பொழுது, பார் முதலிய பருப்பொருள்களைப் பற்றிய நினைப்பு எழுவதில்லை! இஃது, எதுபோல? மரத்தால் செய்யப்பெற்ற ஒரு மாபெரும் யானை இருக்கின்றது என்று வைத்துக் கொள்வோம். அதனைக் கோங்கு, தேக்கு முதலிய மர வகைகளில், 'எம் மரத்தால் ஆனது?' என்று மர ஆராய்ச்சி செய்தால், அது, 'யானை' என்ற நினைப்பே எழுவது இல்லை!

19. தொல்காப்பியம் மூலம் (நூற்பா - 951); கழக வெளியீடு - உசச; (பொருளதிகாரம் - அகத்திணையியல் : ரு - உ.)

20. ஷ (நூற்பா - 1589) ஷ. (பொருளதிகாரம் - மரபியல் : கO).

"நிலந்தீ நீர்வளி விசும்போ(டு) ஐந்தும்
கலந்த மயக்கம் உலகம்......"

'அஃது ஆண் யானையா, பெண் யானையா?' என்ற நோக்கிலே ஆராய்ந்தால், அங்கே மரம் என்ற எண்ணமே எழுவது இல்லை! அல்லவா?

"மரத்தை மறைத்தது, மாமத யானை!
மரத்தின் மறைந்தது, மாமத யானை
பரத்தை மறைத்தது, பார்முதல் பூதம்!
பரத்தின் மறைந்தது, பார்முதல் பூதமே"[21]

'கல்லைக் கண்டால் நாயைக் காணோம்; நாயைக் கண்டால் கல்லைக் காணோம்!' இதனை விளங்கிக் கொள்வதற்கு, 'கற்சிலையில் அமைந்த ஒரு நாய்' என்று பொருள் கொள்ள வேண்டும். இவ்வாறு, இயற்கைப் பொருளை இத்தகையது என்று எண்ணிப் பார்ப்போமாயின், இறைமையின் இயல்பினை எளிதிலே உணர்ந்துகொள்வோம்.

இவ்வுலகின் மாணப் பெரிய அமைப்பினை—ஆற்றலை, சில்வாழ்நாள் பல்பிணிச் சிற்றறிவு மக்களால் அறிந்துகொள்ள இயலுமோ? 'எண்ணாயிரம் ஆண்டுகள் யோகம் இருப்பினும், இறைவனைக் கண்ணாரக் காண இயலாது! ஆயினும், உள்ளத்துள்ளே உணர்ந்து பார்க்கின், கண்ணாடி போலக் கலந்து நிற்கும் இறைநிலை தெரியலாம்' என்றார் திருமூலர்![22] ஆனால், மணிவாசகர் தம் பட்டறிவினைப் பின்வருமாறு விளக்கியுள்ளார்; "உலகை இயக்கும் பேரொளிப் பரம்பொருள் ஒன்று உண்டு என்று உணர்கின்ற அனைவருக்குமே, அஃது, ஆணோ—பெண்ணோ—இரண்டுமற்ற ஒன்றோ என்று அறிய இயலவில்லை! ஆனால், உண்மை வாய்ந்த அடியவனாகிய எளியேனுக்கு உள்ளவாறு வந்து தோற்றினாய்; அவ்வாறு உணர்வுக் கண்களால் கண்டுகொண்டேன்; ஆயினும் என் ஊனக் கண்களால் கண்டு கொள்ள இயன்றிலேன்! என்னே இக் கண்மாயமே!"

"உண்டோர் ஒண்பொருள் என்(று)உணர் வார்க்கெலாம்
பெண்டிர் ஆண்அலி என்றறி ஒண்கிலை!
தொண்டனேற்(கு) உள்ளவா வந்து தோன்றினாய்!
கண்டும், கண்டிலேன்! என்னகண் மாயமே!"[23]

---

21. திருமூலர் (ஏறத்தாழ, இ. பி. 6ஆம் நூற்றாண்டு) திருமந்திரம் (சைவசித்தாந்த பதிப்பு) செய்யுள் - 2290.

22. ௸ ௸ ௸ ௸ 603.

23. மாணிக்கவாசகர் (இ. பி. 3 அல்லது 9ஆம் நூற்றாண்டு) திருவாசகம். திருச்சதகம் - ௩௨. இதன் அழகிய ஆங்கில மொழி பெயர்ப்பு

'மாளிகையிலே வாழ்வோர், அம் மாளிகை கட்டியவன் ஒருவன் உண்டு' என்று நம்புவது போல—மனத்தை ஈர்க்கும் அணிகலன் அணிந்தவன், அந்த அணிகலன் ஆக்கிய பொற்கொல்லன் ஒருவன் உண்டு என்று நம்புவதுபோல, ஐம்பெரும் பூதங்களும் கலந்த இம் மயக்கம் மிகுந்த உலகினை உன்னுபவர்கள் அனைவருமே, இம் மாபெரும் அண்டங்களின் உண்டைப் பிறக்கங்களை ஆக்கியருளிய ஆண்டவன் ஒருவன் உண்டு என்று நம்ப இயலாமலா இருப்பர்?

இந்த நம்பிக்கையிலே, ஊறித்திளைத்த அரும்புலவர் நெஞ்சிலே, அலைவாய்—சீரலைவாய்—திருச்சீரலைவாய்—திருச் செந்தூர்க் கடற்கரையின் இயற்கை எழில் உணர்விக்கும் இறைமை நலன் ஏறியிருந்திருக்க வேண்டும்! அழகு, இளமை, மணம், கடவுள் தன்மை ஆகிய முருகியல் கூறுகள் செந்தூரில் முழுமையாகவே அமைந்துள்ள இயல்பினைப் புலவர் கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து உற்றறிந்தார் போலும்! அங்கே, அழியா அழகினை—குன்றா இளமையை—மாறாத மணத்தை—மறையாத கடவுள் தன்மையை, அஃதாவது, 'முருகு' என்னும் உயர் பண்பை, மக்கள் எல்லோரும் உணர்ந்து மகிழுமாறு செய்தனர்! அம் முருகினை, உருவங் கொடுத்து ஆண்பால் ஆக்கி 'முருகு+அன்'='முருகன்' என்று போற்றினர்! இந்த இயற்கை யழகினையே விரும்பத் தகுந்த அழகு என்னும் விழுமிய பொருளிலே 'வேள்' என்று பாராட்டினர்! மன்மதவேள் (வேள்=அழகன்), என்பதுபோல, 'முருகவேள்' என்றனர்! இந்த உருவ வழிபாட்டிலே, பொதுமக்கள் அனைவரும் உயிர் அன்பும் உயர்ந்த நம்பிக்கையும் கொண்டனர்; அவன் கையிலே, வெல்லும் கருவி ஆகிய 'வேல்' கண்டனர்; அது, கல்லாக—பாறையாக—மலையாக விளங்கும் கொடியோர் நெஞ்சிலே பாய்ந்து, தீவினை அறுக்கும் அருள் கருவியாக மிளிர்வதை ஆராய்ந்தனர்; பாவமலையைப் பிளக்கும் பக்குவக் கருவியே, உப்புநீர்க் கடற்கரையிலே, உவப்புநீர் உறும் நன்னீர் ஊற்று தந்தது என்று நம்பினர்; அதன் வடிவ அமைப்பினை வைத்து,

---

(கி. பி. 1900) By. Rev. G. U. Pope, MA., D.D. (24-4-1820 to 12-2-1908) at Oxford; Page - 62.

"To all who apprehend that one bright Essence truly is,
As female, male, or lifeless thing, thou art not known;
To me thy servant, coming as thou art, thou didst appear!
I saw thee, yet I saw thee not! What visual juggle this!"

'நாழிக்கிணறு' என்று நவின்றனர்; அதனையே, அப் பழந்தமிழ்ப் பாவலர் 'தீம்புனல்' என்று தீட்டி மகிழ்ந்தார் போலும்!

"வரைவயிறு கிழித்த நிழல்திகழ் நெடுவேல்
திகழ்பூண் முருகன் தீம்புனல் அலைவாய்"[24]

[வரை - மலை; பூண் - அணிகலன்; நிழல் - சாயை, அருள்; திகழ் - விளங்கும், சிறக்கும். பூண்திகழ் - நிழல்திகழ்; வெல் - வேல். அலை - கடல் : உறுப்பாகுபெயர். வாய் - இடம்].

எனவே, இப்பொழுதுள்ள, 'நாழிக்கிணறு' அப்பொழுதே—ஏறத்தாழ ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே, திருச்செந்தூரில் திகழ்ந்தது என்று தெளிவாகின்றது! 'கவிஞன் இறப்பதில்லை! ஏனெனில், அவன் யாத்த பாட்டினிலே, அவன் என்றென்றும் வாழ்கின்றான்' என்பர்! இங்கே இப் பாடலை ஆக்கிய பாவலர், பெயர் தெரியவில்லை; ஆயினும், அப் பழம் புலவர் இப் பாடல் வழியே வாழ்கின்றார்! அவர் குறிப்பிட்டுள்ள 'முருகன் தீம்புனல் அலைவாய் (செந்தூர்)' வாழ்கின்றது.

நிறைவுரை:

இத் தென்தமிழ்நாடு பெற்ற தீம்புனல் 'திருச்சீர் அலைவாய்' (திருச்செந்தூர்) வரலாற்றுக் காலத்திற்கு முன்னர் இருந்தே வான்புகழ்பெற்று வயங்குகின்றது! தமிழ்நாட்டில் 'வேடிக்கை மனிதர்'[25] சிலர், வாடிக்கையாகவே வடமொழி வழக்குத் தொடுக்கின்றனர்! அவர்கள் தமிழிலே 'மணிப்பிரவாளம்'[26]

---

24. தொல்காப்பியம் - ச. பவானந்தம் பிள்ளை பதிப்பு (சென்னை 1916) பொருளதிகாரம் - நச்சினார்க்கினியம் - களவியல்; பக்கம் - 497.

25. நாட்டுக் கவிஞர் சி. சு. பாரதியார் (11-12-1882—11-9-1921) பாரதியார் கவிதைகள் (1961) பாரதி பதிப்பகம், சென்னை-17. யோகசித்தி-4; பக்கம்-120.

"தேடிச் சோறுநிதந் தின்று—பல
சின்னஞ் சிறுகதைகள் பேசி—மனம்
வாடித் துன்பமிக உழன்று—பிறர்
வாடப் பலசெயல்கள் செய்து—நரை
கூடிக் கிழப்பருவம் எய்தி—கொடுங்
கூற்றுக்(கு) இரையெனப் பின்மாயும்—பல
வேடிக் கைமனிதரைப் போலே—நான்
வீழ்வேன் என்றுநினைத் தாயோ?"

26. வி. கோ. சூரியநாராயண சாத்திரியார்—தமிழ் மொழியின் வரலாறு: வடமொழிக் கலப்பு—பக்கம்-87. மணிப்பிரவாளம் : மணியும்

என்னும் நடை வளர்வது கண்டு மகிழ்வர்; 'தமிழ்' என்னும் இம் மொழியின் பெயர்கூட, 'திராவிடம்' என்னும் வடசொல் திரிபு - மரூஉ என்று சொல்வதிலே பெருமை கொள்வர்; தமிழகத்தின் சொத்தாக மதிக்கப்பெறுகின்ற 'முத்து', 'பவழம்' என்னும் பெயர்களைக்கூட 'முக்தா', 'பிரவாளா' என்னும் வட சொற்களின் மரூஉ என்று சொல்லிக்கொள்வதிலே, ஓர் உவகை கொள்வர்! இவர்கள் பொய்யும் புனைந்துரையும் மலிந்த கடவுள் கதைகளைப் புகன்று, புராணம், பிரபந்தம் பிறப்பித்த மரபிலே ஊறியவர்கள் அல்லவா? "சூரனை வென்ற இடம் முதலில் 'சயந்தி' அல்லது 'சயந்திபுரம்' என்று வடமொழியில் வழங்கப்பெற்றது; நாளடைவில் 'செயந்தி' 'செந்தி' ஆயிற்று; அது மருவிச் செந்தில்—செந்தூர்—திருச்செந்தூர் என்று தமிழில் வழங்கப்பெறுவது ஆயிற்று" என்கின்றனர்![27] தமிழ் நாட்டின் தலைசிறந்த ஓரிடம், முதலில் வடமொழியில் பெயர் பெற்றுப், பின்னரே தமிழ்ப் பெயர் பெற்றது என்று கூறுவது, பொது அறிவுக்குப் பொருந்துவதோ?

இன்று தமிழ்நாட்டிலே, ஆண்டுதோறும் பன்னூறாயிரக் கணக்கிலே, பணவருவாய் தருகின்ற திருக்கோவில்களிலே, 'திருச்செந்தூர்' இரண்டாவது இடத்தைப் பெற்றுள்ளது என்பர்! பல்வேறு இடங்களிலிருந்து வரும் உல்லாசப் பயணிகளுக்கும், கடவுள் அருள் நாடிவரும் அன்புப் பயணிகளுக்கும் அடைக்கலம் தருகின்ற பாங்கு மிகுந்த புகலிடமாகவே, இக் கடற்கரைத் திருநகர் காட்சி தருகின்றது! தமிழ்நாட்டுக்கு வரும் அயல் நாட்டுப் பயணிகள், திருச்செந்தூர் வந்து செல்லாவிடின் பயணப் பயன் நிறைவு பெற்றவராகவே கருதப்பெறார் என்பர்! ஏனெனில், இச் சீரிடம், வரலாற்றிற்கு மிக முந்திய தொல் பழங்காலத்திலிருந்தே சிறந்து, வளர்ந்து விரிந்து விளங்கி

---

பவளமும் கலந்த கோத்த, மாலைபோல, தமிழும் சமக்கிருதமும் சரிக்குச் சரி கலந்து எழுதப்பெற்ற ஒருவகை 'ஆபாச மொழிநடை' என்பர்.

27. (அ) தேசியூர் சுப்பிரமணிய சாத்திரி—'சுப்பிரமணிய புசங்கம்' தமிழுரை—பக்கம்: 3.

27. (ஆ) கி. வா. சகந்நாதன்—'திருமுருகாற்றுப்படை விளக்கம்'; (1970) பக்கம்—114.

27. (இ) Madurai University - Decennium Celebrations SOUVENIR (1966-76, Articles-*Tiruchendur* (T. Vaitha ma nithy) Page -25. "In the remote legendary days, it is said, the place was known as 'Jayanthipuram' which literally means 'the place of victory'. Later it has come to be called 'Tiruchendur'."

வருகின்றது! இதன் நீண்டகால வரலாறு, இன்பத் தேனூறு போன்று தித்திப்புத் தருகின்றது! இத் திருக்கோவிலின் சுவர்களிலே, முன்னைய மன்னவர்களின் பல்லாண்டுகாலக் கல்வெட்டுக்கள் பல காணப்பெறுகின்றன. இங்கே, கடவுள் உணர்வூட்டிக், கவின் விருந்து காட்டும் கற்சிலைகள் பல உள்ளன. இத் திருக்கோவிலின் திருவடியிலே, கடலலை வந்து தழுவுங் காட்சி, மட்டற்ற மகிழ்ச்சி யூட்டுகின்றது.[28] மன அமைதி பெற விழையும், மக்கள் எலலோருமே, 'முருகன் திருவருள்' நாடி, 'நீம்புனல் அலைவாய்' ஆகிய இத் 'திருச்செந்தூர்' தேடி வருகின்றனர்! எனவே, தமிழகத்திலே, திருநெல்வேலி மாவட்டத்திலே—கிழக்குக் கடற்கரை ஓரத்திலே - மிகப் பேரழகு பெற்ற எழில் கோவிலாக அமைந்து அன்றும், இன்றும், என்றுமே இத் 'திருச்செந்தூர்' நின்று நிலவுகின்றது எனலாம்!

---

## சமயம் அனைத்தினுக்கும் முதல்வா!

சந்தங் கடலில் நெடும் படவில்
கழியில் சுழியில் கழுநீரில்
கானற் கரையில் கரைதிகழுங்
கைதைப் பொதும்பில் கரும்பினங்கள்

தந்துங் கமலப் பசும்பொகுட்டிற்
சாலிக் குலையில் சாலடியில்
தழைக்குங் கதலி அடிமடலில்
தழைவைத் தழுத முதுகுரம்பைக்

குந்துந் தரங்கப் புனற்கவரில்
குவளைத் தடத்தின் மடைவாயில்
குடக்கூன் சிறமுட் பணிலமொரு
கோடி கோடி யீற்றுளைந்து

முத்தஞ் சொரியுங் கடலலைவாய்
முருகா முத்தந் தருகவே
மொழியுஞ் சமயம் அனைத்தினுக்கும்
முதல்வா முத்தந் தருகவே.

—திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்

---

28. Madurai University: Indian Academy of Science (32nd session); *Places of Interest*; Page - 27. "......What with its location right on the shore with the waves almost washing its face and some excellent sculptures and several inscriptions, the temple is one of the most beautiful in all Tamil Nadu."

# தமிழின் தலைமையை நாட்டும் தனிச்சொற்கள்

[ஞா. தேவநேயன்]

11. கலித்தல்

'கலித்தல்' என்பது பிறப்புக் கருத்து வேர்ச்சொல்.

உல்—உல்லரி=தளிர். (அக. நி.)

உல்லரி—வ. வல்லரி·

உல்—குல்—குள்—குள—குளவு—குளகு = இளந்தழை. "மறிகுள குண்டன்ன மன்னு மகிழ்ச்சி" (நாலடி. 16).

குளவு—களவு—களவம்—களபம்=யானைக் கன்று. "மத கரிக் களபமும்" (சிலப். 25 : 49).

ஒ. நோ: OS *calf*, AS cealf, OE *coelf*, ME *kalf*, *calf*, E. *calf*, OHG *chalb*, ON *kalfr*, Du. kalf, Icel kalfr, Swed, *kalf*, Dan, *kabr*, Goth *kalbo*, G. *kalb* Skt. *kalabha*.

குள—குழ—குழம்=இளமை.

குழ=இளமையான. "மழவுங் குழவும் இளமைப் பொருள" (தொல். உரி. 14). குழமகன்=இளந்தலைவன். "குழமகனைக் கலி வெண்பாக் கொண்டு......விளக்கவுரைத்தாங்கு" (இலக். வி. 858).

குழ—வ. குட.

குழ—குழவு=இளமை. குழவு—குழகு=1. குழந்தை. "குழகென வெடுத்துகந்த வுமை" (திருப்பு. 106). 2. இளமைச் செவ்வி. "கொம்மைக் குழகாடுங் கோலவரை மார்பர்" (சீவக. 2790). 3. அழகு—கொன்றை சூடிக் குழகாக......விளையாடும்" (தேவா. 468 : 7).

குழகு—குழகன்=1. இளையோன். "நின்மணக் குழகன்" (திருவிளை. திருமண. 44). 2. முருகன். (பிங்.). 3. அழகன். "கொட்கப் பெயர்க்குங் குழகன்" (திருவாச. 3 : 12).

குழகன்—க. ஹுடுக.

குழம்—குழந்து—குழந்தை=கைப்பிள்ளை. "குழந்தையை யுயிர்த்த மலடிக்கு" (கம்பரா. உருக்கா. 65). 2. இளமைப் பருவம். "குழந்தை வெண்மதி" (கம்பரா. ஊர்தேடு. 209).

ஒ. நோ: ME, E. *child*, OE *cild*, Gothr *kilthei*, womb (கருப்பை).

குழந்து—கொழுந்து=1. இளந்தளிர். 2. இளமையானது. 3. மென்மையானது. 4. மருக்கொழுந்து. 5. படையின் முன்னணி. "சேனையின் கொழுந்து போய்க் கொடிமதின் மிதிலையி னெல்லை கூடிற்றே" (கம்பரா. எழுச்சி. 24). 6. எரி நெருப்பின் நாவு. 7. கவரிநுனி. 8. கரும்புநுனி, கொழுந்தாடை. ம. கொழுந்து.

குழவு—ஒ. நோ: L. dim. suf. *culus*, *culum*, *cula*, *cule—cle—cel*, *cillus—cil*.

Ex. fasciculus, vasculum, Auricula, arimalcule, particle, parcel, L. codicillus—E. codicil.

குட்டியப்பன், குட்டிக்கிழங்கு, குட்டித் தொல்காப்பியம், குட்டித் தக்காளி, குட்டிப்பல், குட்டிவிரல் முதலிய சொற்களில், குட்டி என்பது சிறுமைப் பொருள் முன்னொட்டாக வழங்குதல் காண்க. குழவித் திங்கள் என்பதையும் நோக்குக.

குழவு—குழவி=1. கைக்குழந்தை. "ஈன்ற குழவி முகங் கண்டிரங்கி" (மணி. 11 : 114). 2. சில விலங்குகளின் குட்டிப் பெயர். (தொல். மர. 19-23). 3. ஓரறிவுயிரின் இளமைப் பெயர். (தொல். மர. 24). "வீழில் தாழைக் குழவி" (தொல். மர. 24, உரை).

குழம்—குழன்—குழல்—குழலை—குதலை.

ஒ. நோ: மழலை—மதலை.

குதலை=1. குழந்தை. 2. குழந்தையின் மழலைச் சொல். "இதழ் குவித்துப் பணித்த குதலையுந் தெரியாது" (கல்லா. 5). 3. இனிய சொல். "குதலைச் செவ்வாய்க் குறுந்தொடி மகளிர்" (சிலப். 30 : 114).

குழல்—குதல்—கதல்—கதலி=சிறுவாழை. மொந்தன் என்பது பெருவாழை.

கதலி—கசலி—சசலி=சிறு கெண்டைமீன். கெண்டைக் கசலி என்பது வழக்கு.

கதல்—கசல்—கச்சல்=1. வாழைப் பிஞ்சு, இளம்பிஞ்சு. க, கச்சு. 2. ஒல்லி. ஆள் கச்சலாயிருப்பான் (உ. வ.)

கதலி—வ. கதலீ=வாழைப் பொது.

சிறு வாழையைக் குறிக்கும் கதலி யென்னும் தென்சொல், வடமொழியில் தன் சிறப்புப் பொருளை யிழந்து, வாழைப் பொதுவைக் குறித்தலை நோக்குக.

பேரா. பரோ (Burrow) இதை அறியாது, தம் 'சமற்கிருத மொழி' (The Sanskrit Language) என்னும் நூலின் இறுதி யதிகாரத்தில்,

"*kadalē* 'banana': cf. Sakai *telui*, *kelui*, Nicobar *talūi*, Khmer *tut taloi*, Palaong *kloa* 'plantain'; Savara *kin-tēn* 'banana' என்று, கதலி யென்னும் சொல்லிற்கு மூலங்காட்டி யுள்ளமை சிறிதேனும் பொருந்துமா வென்று அறிஞர் கண்டு கொள்க.

குள்—குட்டு—குட்டன்=1. சிறுவன், சிறுபிள்ளை. "என் சிறுக் குட்டன்" (திவ். பெரியாழ். 1 : 4 : 2), "குயிலெனப் பேசு மென் குட்டனெங் குற்றது" (திருக்கோ. 224). 2. ஆட்டுக் குட்டி. (திவா).

ம. குட்டன், க. குட்ட (guḍḍa).

குட்டு—குட்டி=1. மூங்கா, வெருகு, எலி, அணில், நாய், பன்றி, புலி, முயல் ஆகியவற்றின் இளமைப் பெயர். (தொல். மர. 6, 8). 2. விலங்கின் இளமைப் பொதுப் பெயர். 3. சிறு பெண் அது நல்லகுட்டி. 4. கடைசிப் பிள்ளை. இவன் என் கடைக்குட்டி. 5. சிறுமைப் பெயர் எ—டு. குட்டித் தொல் காப்பியம்.

ம. குட்டி, க. குட்டி (guḍḍi). த. பிள்ளைகுட்டி=பிள்ளைகள்.

குட்டி—E. *kid*, a young goat, *kid*, *kiddy* (sl), child; ME *kid*, *kidde*. Dan. *kid*, Swed. *kid*, Norw. *kid*, Icel. *kid*, ON *kith*, OHG *kizzi*, *chizzi*, MHG., G. *kitze*.

*kid*—fox, a young fox.

குள்—குய்—குய்ஞ்சு—குஞ்சு = 1. பறவைக் குஞ்சு. 2. அணில் எலி முதலியவற்றின் குட்டி.

ம. குஞ்ஞு. க. கூசு=குழவி.

குஞ்சு—குஞ்சி=1. பறவைக்குஞ்சு. 2. சிறியது. எ-டு. குஞ்சியப்பன், குஞ்சிப் பெட்டி.

குல்—குர்—குரு. குருத்தல்=தோன்றுதல். "அதினின்று மொரு புருடன் குருத்தான்" (விநாயகபு. 72 : 4).

குரு=1. குழந்தை. 2. தோன்றுங் கொப்புளம், வேர்க்குரு "வெப்பு நோயுங் குருவுந் தொடா" (சிலப். உரைபெறு கட்டுரை). 3. மயிர் சிலிர்ப்பு. 4. கொட்டை, பலாக்குரு. 5. புல்லியது. குருநகை=புன்சிரிப்பு. LG. *gor*, child.

குரு—குருத்து=1. ஓலைக் கொழுந்து, பனங்குருத்து. 2. கொழுந்தாடை, கரும்புநுனி. "குருத்திற் கரும்புதின் றற்றே" (நாலடி. 211). 3. இளமை. 4. மெல்லிய உட்புறம், காதுக் குருத்து. 5. மெல்லிய உட்பொருள். மருப்பு (தந்தம்) மூளையி வற்றின் குருத்து. "ஆளி நன்மான்......வேழத்து வெண்கோடு வாங்கிக் குருத்தருந்தும்" (அகநா. 381).

ம. குருத்து.

குரு—குருகு=1. இளமை குருகுக் கிழங்கு. 2. விலங்கின் குட்டி. "சிங்கக் குருகு" (திவ். திருப்பா. 1, வ்யா.). 3. குருத் தோலை. "குருகு பறியா நீளிரும் பனைமிசை" (பரிபா. 2 : 43).

ம, தெ., து. குரு.

குரு=குரும்பை=தெங்கு பனைகளின் இளங்காய். "குன்றுங் குரும்பையும் வெறுத்தநின் னிளமுலை" (கல்லா. 52).

குரு—குருள்—குருளை=1. குழந்தை. "அருட் குருவாங் குருளை" (சி. சி. பரபக். பாயி. 4). 2. சில விலங்கின் குட்டி. (தொல். மர. 8, 9). 3. பாம்பின் குட்டி. "சிறுவெள்ளரவி னவ்வரிக் குருளை" (குறுந். 119).

"Girl, a female child, young woman, (E.) ME. *girle*, *girle*, *gyrle*, formerly used of either sex and signifying either a boy or girl......N Fries. *gor*, a girl; Pomeran. *goer*, a child; O Low G. *gor*, a child....Swiss *gurre*, *gurrli*, a depreciatory term for a girl......Norw. *gorre*, a small child; Swed. dial. *garra*, *gurre* (the same). Root uncertain."—E.D.E.L. by Skeat, p. 240.

"*girl*, n. ME. *gurle*, *gurl*, *gerle*, *gerl*, boy, girl, rel to LG. *gore*, *gor*, a child; of unecrtain origin."—Klein's C.E.D. E.L., p. 312.

சிறுமியைக் குட்டி யென்னும் வழக்குத் தமிழிலுண்மை யாலும், குரு என்னும் மூலத்தினின்றே குருளை யென்னுஞ் சொல் திரிந்திருப்பதனாலும், 'girl' என்னும் ஆங்கிலச் சொல் லிற்குத் தமிழ்ச் சொல்லே மூலமென்பது தெள்ளத் தெளிவாம்.

குரு—குருப்பு=தோன்றும் பரு. தெ. குருப்பு.

குருமா—குருமான்—குருமன்=குட்டிவிலங்கு. குட்டி குரு மான் என்பது உலக வழக்கு.

குரு—குருவி=1. சிறு பறவை வகை. 2. சிறுமை. எ—டு. குருவிக்கண், குருவித்தலை, குருவித் தேங்காய்.

குரு—கரு=1. பீள். "மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்" (புறநா. 34). 2. முட்டைக்கரு. "புறவுக் கருவன்ன புன்புல வரகின்" (புறநா 34). 3. முட்டை. 4. உடம்பு. "கருவுள் வீற்றிருந்து" (திவ். திருவாய். 5 : 10 : 8). 5. பிறப்பு. "கருவைத் துடைப்ப" (பிரபுலிங். கொக்கி. 15). 6. குழந்தை. "சோரர்தங் கருவைத் தங்கள் கருவெனத் தோளிலேந்தி" (பாரத. நிரை. 116). 7. குட்டி. "காசறைக் கருவும்" (சிலப். 25 : 52). 8. அச்சுக்கரு. "திருவுருவினைக் கருவினாற் கண்டு" (திருவிளை. இரச. 9). 9. வினைமுதற் கரணியம். "கருவா யுலகினுக்கு" (திருவாச. 10 : 14). 10. "நடு. உள்ளூர்க் கரு வெலாமுடல்" (கம்பரா. கிங்கரர். 44). 11. உட்பொருள். 12. கருப்பொருள். "தெய்வ முணவே......கருவென மொழிப" (தொல். அகத். 18). 13. எண் கருமக்கரு. 14. நுண்ணனு. "கருவளர் வானத்து" (பரிபா. 2 : 5). ம. கரு.

கரு—கருந்து=மரக்கன்று. (கோடை. வ.).

கரு—கருப்பு—கருப்பம்—வ. கருப்ப (garbha).

குல்—கல்—கலி. கலித்தல்=1. உண்டாதல். "களியிடைக் கலித்த தென்ப" (ஞானா. 11). 2. பிறத்தல். இவ் வெள்ளத்தில் மீன் நிறையக் கலிக்கும். (நெ. வ.)

குல்—குன்—குன்னி=மிகச் சிறியது. நன்னியுங் குன்னி யும் என்பது எதுகை மரபிணைச் சொல். கூட்டத்திற்கு ஒருவ ராவது பெரியவர் வரவில்லை; வந்தவை யெல்லாம் நன்னியுங் குன்னியும். (நெ. வ.) ஒ. நோ : *kin*, a dim suf. E. manikin. *ken*, a dim suf. Du. manneken. G.—chen.

குன்னி—கன்னி=1. சிறுமி. 2. குமரி. "கன்னி தன்னைப் புணர்ந்தாலும்" (சிலப். 7. மன்னுமாலை). 3. இளமை. "கன்னிம்

புன்னை" (திருக்கோ. 177), கன்னிக்கோழி (உ. வ.). 4. என்றும் இளமையாயிருக்குங் காளி. "கன்னி செங்கோட்டம்" (கல்லா. 58). 5. புதுமை. "கன்னி நீலக்கட் கன்னி" (சீவக. 900). 6. முதனிகழ்ச்சி; கன்னிவேட்டம். 7. அழிவின்மை. "கன்னிமா மதில்சூழ் கருவூர்" (திவ். பெரியதி. 2 : 9 : 7). 8. குமரியாறு. "கன்னியழிந்தனள், கங்கை திறம்பினள்" (தமிழ்நா. 81). 9. கன்னியோரை. (பிங்.).

கன்னி — கன்னிகை = இளங்குமரி. 'கை' சிறுமைப் பொருட் பின்னொட்டு. ஒ. நோ : குடி (வீடு, கோயில்)—குடிகை (சிறுவீடு, சிறுகோயில்).

சிறுமையும் இளமையும் குறிக்கும் வடசொற்கள்

கந=1. சிறிய. 2. இளமையான.

கநய, to make less, smaller, diminish.

கநா, a girl, maid. RV. (இருக். வே.)

கநிஷ்ட, the youngest.

கநீ, a girl, maiden.

கநீந, young, youthful, R.V.

கநீநக (k), a boy, youth RV.

கநீயஸ், younger, a younger brother or sister, younger son or daughter, RV.

கநீயஸ, younger.

கந்ய, the smallest. Zd. *kainin*, Hib. *cain*, chaste, undefiled.

கந்யக (k), the smallest.

கந்யகா (k), a girl, maiden, virgin, daughter.

கந்யநா, a maiden, girl, RV.

கந்யஸ, younger.

கந்யா, a girl, virgin, daughter, RV, AV. (அதர். வே.)

கந்யிகா (k), see கந்யக.

—மானியர் உவில்லியம்சு ச - ஆ. அகரமுதலி, பக். 248-9.

கல்—கன்—கன்று=1. பல விலங்குகளின் இளமைப் பெயர். (தொல். மர. 15 - 18). 2. மரத்தின் இளமைப் பெயர். வாழைக்கன்று, வேப்பங்கன்று. 3. சிறியது. 4. அணிவகைச் சொல்லிற் சிறுபிள்ளை. இரண்டு கன்று கயந்தலை யானையின் இந்தச் சம்பளம் எப்படிப் பற்றும்? (உ. வ).

ம. கன்னு, க., து. கந்து, க. கன்னெ=மரக்கன்று. க. கந்த=குழந்தை, சிறுபிள்ளை.

கன் - தெ கனு=பிள்ளைபெறு (to bring forth young). ஆபிரகாமு ஈசாகுனு கனெனு=ஆபிரகாம் ஈசாக்கைப் பெற்றான்.

பிரா. (பிராகுவீ). கன் (khan), to give birth to; KGad. *karr*, to yean: Kur. (Kurukh), *kharj*, to be produced, to bear fruit.

## LATIN WORDS

தெ. கனு—L. *geno*, to beget.

*genero*, to beget, produce, create, cause to exist, bring to life, generate.

*gener*, a son-in-law.

*generosus*, of noble brith.

*genesis*, the constellation which presides over one's birth.

*genetivus*, *genativus*, inborn, innate.

*genetrix*, one who brings forth or bears, a mother.

*genitabilis*, relating to production or birth.

*genitalis*, belonging to birth.

*genitura*, a begetting, genitor, a begetter.

*gens*, a clan, a number of families connected together by a common discent and the use of the same gentile name.

*genus*, birth, descent, origin.

## GREEK WORDS

*Gk*, *genos*, race,

*genomai*, *gignamai*, I am born.

*genea*, race.

*genēs*, born, of, produced by.

*gennān*, to beget.

*Teutonic words derived from Latin and Greek*

E. *gen*, Gk. suf. forming nn. in Scientific use.

(1) in the sense 'that which produces.'
Ex. oxygen, hydrogen, nitrogen.

(2) in the sense 'growth'.
Ex. undogen, acrogen, thallogen.

*gender*, ME f. OF gon(d)re, f. L. genus.

*gene*, modern formation of GEN.

*geneology*, ME f. OF (gie) f. LL. f. Gk. genealogia.

*general* ME f. OF f. L. *generalia.*

*generate* of L. *generare*, to beget.

*generic* f. F. *generique* or mod. L, *genericus.*

*generous*, f. L. *genereux* or L. *generosus.*

*genesis*, L. f. Gk. *gen*, to become.

*genetic* f. L. *genesis.*

*genial*, generative, f. L. *genialis.*

*genital* f. OF genital or L. genitalis, genitalia (*genit*, to beget).

*genitive* ME f. OF *genitif* or L. *genitivus.*

*genius* f. root of L. *gignere*, to beget.

*genscide* f. Gk. *genos*, race (*cide*, killing).

*gens*, clan. f. L. *gignere*, to beget.

*genteel* re-adoption of F. gentil.

*gentile*, ME f. L. *gentilis.*

*gentle*, well-born. ME f OF gentil f. L. *gentilis.*

*gentry*, prob. f. obs. gentrice f. OF *genterise*.

*genuine* pure-bred, f. L. *genuinus*, innate, authentic.

*genus*, group of species f. L. *genus*-aris.

*geny*, suf. forming nn. indicating mode of production f. F. *genie* (gen).

Ex. monogeny, anthropogeny.

*gony*, suf. signifying creation.

E. cosmogony f. Gk. cosmogonia, [*cosmos*, universe, *gonia* f. *gonos*, begetting.

சமற்கிருதச் சொற்கள்

(சன்—gan—ஜந்)

ஜந், to be born, RV, AV.; to grow, AV. to generate, beget, produce, create, cause, RV, AV.; to be grown or produced, come into existence, RV, AV.

ஜந, generating, creature, living being, man, person, race, RV.

ஜநக(k), generative, generating, begetting, producing, causing; a progenitor, father.

ஜநந, generating, begetting, producing, causing, a progenitor, creator; birth.

ஜநநீ, mother.

ஜநயதி(ti), generation.

ஜநி, a woman, wife.

ஜநித(ta), engendered, begetting, produced, occasioned.

ஜநித்ர, a birth place, place of origin, home, origin.

ஜநீ, a daughter-in-law.

ஜந்து, a child, off-spring, a creature, living being, man, person.

ஜந்ம, birth.

ஜந்மந், birth, production.

ஜந்ய, born, produced; born or arising or produced from, occasioned by.

ஜந்—ஜ.

ஜ, born or descended from, produced or caused by, born or produced in or at or upon, growing in, living at.

எ-டு. அக்ரஜ (g), அண்டஜ, அநுஜ, கிரிஜ (g), த்விஜ நிஜ, பங்கஜ (nk), ஸஹஜ.

ஜ—ஜா.

ஜா, born, produced. Ex. agrajā, adrijā.

ஜாத (ta), born, brought into existence by, engendered by, grown, produced, arisen, caused, appeared, appearing on or in, destined for

ஜாதக (taka), engendered by, born under an asterism, a new-born child; nativity, astrological calculation of a nativity, the story of a former birth of Gautama Buddha.

ஜாதி (ti), birth, production, re-birth, the form of extistence fixed by birth, position assigned by birth, rank, causte, family, race, lineage kind, genus, species, the generic properties, the character of a species.

ஜாந, birth, origin, birthplace.

ஆங்கிலச் சொல்லாராய்ச்சியாளர், kind, king என்னுஞ் சொற்களையும் kin என்னுஞ் சொல்லினின்று திரிக்கின்றனர்.

"*Kind*, n. ME *kinde*, *kund*, *kende*, fr. OE. *cynd*, *ge-cynd*, kind, nature, quality, manner, origin, generation, offspring, rel. to OE *cyn*, kind, kin.

"*Kindergarten*, n. G. *Kindergarten*, lit. 'garden of children'...*kinder*, pl. of *kind*, child, and *garten*, garden, kin-kind.

"*Kinchin*, n. child.—Corrupted fr. G. *kindchen*, 'little child', dimin. of *kind*, child, which is rel to ON *kundr*, son.

—Kleins

சமற்கிருதம் உட்பட்ட ஆரிய மொழிகளையெல்லாம் ஆழ்ந்து ஆராய்ந்த, கீற்று (Skeat), கிளேன் முதலிய பேரறிஞரெல்லாம், மேற்காட்டிய சொற்கட்கு GEN, (KEN) என்பதே வேர் என்று திட்ட வட்டமாய்க் குறித்துள்ளனர்.

க—ச, ga—ஜ. ஆதலால், gan (kan) என்பது மூலமும் jan என்பது அதன் திரிபுமாகும் என்று தெற்றெனத் தெரிந்து கொள்க.

# புதிய முத்தமிழ்*

[திரு. மு. ரா. பெருமாள் முதலியார், எம்.ஏ., எல்.டி.]

அமெரிக்கர்கள் அறிவுத்துறையை மூன்று பெரும் பிரிவு களுள் அடக்குகிருர்கள். அவை மக்களியல் துறை (Humanities), சமுதாய அறிவியல்துறை (Social Sciences), இயற்கை அறிவியல்துறை (Natural Sciences) என்பவை ஆகும். தொழில் நுட்ப இயல் துறையை நாம், வசதி நோக்கி, நான்காம் துறை யாக வைத்துக்கொள்ளலாம். முதலிற் சொன்ன துறையில் தமிழ் சிறந்த வளர்ச்சி பெற்றுள்ளது. ஆனல், ஏனைய மூன்று துறைகளிலும் உலகிலுள்ள பல மொழிகள் இன்று தமிழைக் காட்டிலும் மிக அதிகமாக வளர்ந்துள்ளன. எனவே, அந்த முத்துறைகளிலும் புதிய முத்தமிழ் வளர்ச்சிக்கு உதவுவதுதான் கற்றறிந்த தமிழ்மக்கள் இன்று ஆற்றவேண்டிய முதன்மை வாய்ந்த பணியாக இருக்கிறது.

இந்தப் பணியை ஆற்ற விரும்புபவர்களுக்கு இரண்டு அடிப்படைத் தகுதிகள் தேவைப்படுகின்றன. அவை குறிப் பிட்ட துறையில் ஐயந்திரிபற்ற அறிவும், எடுத்துக்கொண்ட பொருளைத் தெளிந்த தமிழ் உரைநடையில் எழுதும் ஆற்றலும் ஆகும். இந்த இருதிறன்களையும் தமிழர் சிலர் இன்று பெற் றுள்ளமை தமிழின் எதிர்காலம் சிறப்பாக இருக்கும் என்ப தற்கு நல்ல அறிகுறியாய் இருக்கிறது. ஆனாலும், தற்கால வாழ்க்கைத் தேவைகள் அனைத்தையும் நிறைவு செய்வதற்கும் சமுதாய அறிவியல், இயற்கை அறிவியல், தொழில் நுட்ப இயல் ஆகிய துறைகளில் வளர்ந்துகொண்டே போகும் அறிவைப் பிழிந்தெடுத்து நூல் வடிவில் தருவதற்கும் தமிழ்மொழி முழுத் தகுதியும் பெறவேண்டுமானல் அம் மொழியிலேயே சில புதுமை களைப் புகுத்துவது இன்றியமையாதது என்பது என்னுடைய கருத்து. அந்தப் புதுமைகளைப் புகுத்துவதால் தமிழ்மொழியின் தூய்மை கெட்டு, அஃது அடையாளந் தெரியாத அளவுக்கு மாறிப் போகக்கூடும் என்று தமிழறிஞர் பலர் அஞ்சுகின்றனர். வடமொழியின் ஒலிகளையும் சொற்களையும் மரபுகளையும் தங்கு தடையின்றி ஏற்றுக்கொண்டதால் மலையாளம் உருத்தெரியா மல் மாறிப் போனதையும், தொல்காப்பிய நெறியைப் பின்பற்றி வடசொற்கள் இயன்ற வரையில் நீக்கியும், வடமொழி மரபுகளை

---

* இக் கட்டுரை 1972 செப்டம்பரில் எழுதப்பட்டது.

ஏற்றுக்கொள்ளும்போதும் அவற்றைத் தமிழ் மரபுகளுக்கேற்ற வாறு மாற்றிக்கொண்டும், வடசொற்களைப் பயன்படுத்தும் இன்றியமையாமை ஏற்படும்போது வடவெழுத்துக்களை நீக்கி அவற்றின் ஒலிகளைத் தமிழ் நெடுங் கணக்கின் ஒலிகளுக் கேற்ப மாற்றியமைத்துக்கொண்டும் வந்ததால் தமிழர்கள் தமிழ் மொழியின் தனித்தன்மையை இன்றளவும் காக்க முடிந்தமை யையும் அவ் வறிஞர்கள் எடுத்துக்காட்டுகிறார்கள். ஆனால், தமிழ்மொழியில் நம் முடைய பற்றுக்கும் பாராட்டுக்கும் உரியவை யாய் இருக்கும் நூல்கள் எல்லாம் மக்கள் இயல் நூல்களே யன்றி அறிவியல் நூல்கள் அல்ல. எனவே, இப்போது அறி வியல் நூல்களை எழுத விரும்புபவர்கள் தொல்காப்பிய நெறி யைப் பின்பற்ற இயலுமா, அவ்வாறு பின்பற்றல் தேவைதானா என்று பார்க்க வேண்டும்.

அறிவியற்கருத்துக்களையும், தொழில் நுட்பவியற் கருத்துக் களையும் எடுத்துரைப்பதற்கு மிகச் சிறந்த கருவியாக இன்று விளங்குகின்ற மொழி ஆங்கில மொழிதான். பிரெஞ்சு, செர்மன், ரஷியன் போன்ற மொழிகளும் மேலே சொன்ன கருத்துக்களை எடுத்துரைப்பதற்கு ஏற்ற மொழிகளாய் இருப்பினும், முன் னேற்றமடைந்த உலகம் ஆங்கிலத்தையே அந்தப் பணிக்கு மிகவும் ஏற்றதாய்க் கருதுகிறது. அதனாற்றான் இன்று உலக முழுதிலும் வெளிவருகின்ற அறிவியல் நூல்கள், அறிவியல் பருவ இதழ்கள் ஆகியவற்றுள் ஏறக்குறைய மூன்றில் இரண்டு பகுதிகள் ஆங்கில மொழியில் வெளிவருகின்றன. அதனாற்றான் முன்னேற்றமடைந்த ரஷியா போன்ற நாடுகளிலும் ஆங்கிலம் விரும்பிக் கற்கப்படும் மொழியாக இருக்கிறது. ஆங்கில மொழியிலும் அறிவியல் துறையில் பயன்படும் கலைச்சொற்கள் கிரேக்க லத்தீன் மொழிகளின் அடிப்படையில் தோன்றிய பன்னாட்டுக் கலைச் சொற்களாய் (International technical terminology) இருக்கின்றன. அவை ஆங்கிலத்திற்கு மட்டும் சொந்தமானவையல்ல. அறிவியல் துறையிலும் தொழில் நுட்பத் துறையிலும் முன்னேற்றமடைந்துள்ள நாடுகள் எல்லாவற்றிலும் உள்ள அறிஞர்கள் அந்தக் கலைச் சொற் களைப் பயன்படுத்துகிறார்கள். அவை உலகத்தின் பொது உடைமையாய் இன்று விளங்குகின்றன. எனவே, தமிழிலும் அறிவியற் பாடங்களைக் கற்பிப்பதற்கும் நூல்களை எழுதுவதற் கும் பன்னாட்டுக் கலைச் சொற்களைப் பயன்படுத்துவதுதான் அறிவுடைமையாகும். அவ்வாறன்றி, அந்தக் கலைச் சொற்க ளுக்கு ஏற்ற தமிழ்ச் சொற்களைக் கண்டுபிடிப்பதில் 'காலத்தைச் செலவிடுவது பயன் தராது.' கருத்துக்கள் நம்முடையவையாய்

இருந்தால் சொற்களும் நம்முடையவையாய் இருக்கும், இருக்க வேண்டும். கருத்துக்களும் கருவிகளும் வெளிநாட்டுக் கண்டு பிடிப்பாயிருக்கும்போது அவற்றிற்குத் தமிழ்ப் பெயர்களைக் கண்டுபிடிக்க முயல்வது புதிய கருத்துக்கள் தோன்றுவதற்கும் புதிய கருவிகள் படைக்கப்படுவதற்கும் பயன்படா! மேலும், காலத்தையும் கவனத்தையும் செலவழித்துத் தமிழில் கலைச் சொற்களைக் கண்டுபிடித்து அறிவியற் பாடங்களைக் கற்பித்த பின்னர் அப் பாடங்களைக் கற்ற மாணவர்களும் கற்பித்த ஆசிரியர்களும் அந்தத் துறையில் மேலும் புதிய கருத்துக்களை யும் புதிய கருவிகளையும் பற்றி அறிந்துகொள்ள வேண்டு மானல் அவர்கள் பன்னாட்டுக் கலைச் சொற்களைக் கற்று ஆங்கில நூல்களைப் படித்துத்தான் ஆகவேண்டும். இத்தகைய செய்திகள் எல்லாவற்றையும் ஆராய்ந்து பார்த்த பின்னரே 'கல்வி நிலைய ஆசிரியர்களும் நூலாசிரியர்களும் இப்போதிருக் கின்ற தமிழ்க் கலைச்சொற்களைப் பயன்படுத்துவதோடு பன்னாட்டுக் கலைச் சொற்களையும் கட்டாயமாய்ப் பயன்படுத்த வேண்டுமென்று தமிழக அரசும் வற்புறுத்துகிறது.'

ஆனால், இந்தக் கருத்தைத் தமிழாசிரியர்கள் இன்னும் ஏற்றுக்கொள்ளவில்லை; ஏற்றுக்கொள்ளலாமென்று நினைப்பவர் களும் ஆங்கிலத்திலுள்ள கலைச் சொற்களைத் தமிழ் எழுத்தில் எழுதக்கூடாது என்கிறார்கள். அவற்றை ஆங்கில எழுத்தி லேயே எழுதினாலும் அவர்கள் போற்றுகின்ற மொழித்தூய்மை கெட்டுத்தான் போகும். தொல்காப்பியர் இப்போது உயிருடன் இருந்தால் இன்றைய உலக வாழ்க்கைக்கு இன்றியமையா அடிப்படையான அறிவியல் தொழில் நுட்பக் கலைச் சொற்களை எவ்வாறு தமிழ்மொழியிற் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்ப தற்கு இலக்கணம் வகுத்துக் கொடுத்திருப்பார். அந்தச் சொற்களை அப்படியே தமிழ்மொழியிற் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்பதுதான் என்னுடைய உறுதியான கருத்து.

ஆனால், அந்தச் சொற்களை எழுதுவதற்குத் தேவையான ஒலி வடிவங்களும் வரி வடிவங்களும் தமிழில் இல்லை. இன்று முன்னேற்ற மடைந்துள்ள பிறமொழிகள் எல்லாவற்றிலும் அந்த ஒலி வடிவங்களும் வரி வடிவங்களும் இருக்கின்றன. தமிழ் ஒன்றில் மட்டும் அவை இல்லாதது குறையென்றே நான் கருதுகிறேன். எனவே, தமிழில் புதிய வரி வடிவங்களை உண் டாக்க வேண்டும். இல்லாவிட்டால், இப்போது இருக்கிற எழுத்துக்களுக்கு அடையாளக் குறிகளை இடுவதன்மூலம் தேவை யான புதிய ஒலி வடிவங்களைத் தமிழில் புகுத்திக் கொள்ளலாம்.

அவ்வாறு சேர்த்துக்கொள்ளவேண்டிய புதிய ஒலி வடிவங்களைக் கீழே தருகிறேன் :

1. மொழி முதல் இடை கடை ஆகிய மூவிடங்களிலும் வேறு எழுத்தொடு புணராமல், ஆங்கில எழுத்துக்களான g, d, b என்னும் எழுத்துக்கள் குறிக்கின்ற ஒலிகளும் the என்னுஞ் சொல்லிலுள்ள தகர ஒலியும், chair என்னுஞ் சொல்லிலுள்ள சகர ஒலியும் f, z என்னும் எழுத்துக்கள் குறிக்கிற ஒலிகளும் தமிழில் தேவை.

2. Man என்னுஞ் சொல்லிலுள்ள ஏகாரமும் four என்னும் சொல்லிலுள்ள ஓகாரமும் தமிழில் தேவை.

3. இவற்றைத் தவிர ஜ, ஷ, ஸ, ஹ, ஶ்ரீ என்னும் எழுத்துக்களைத் தேவையான இடங்களில் தடையின்றிக் கையாளலாம். அன்றியும், ட, ர, ல ஆகிய எழுத்துக்களை மொழி முதல் எழுத்துக்களாய்ப் பயன்படுத்தவும் தயங்கக் கூடாது,

இன்றைய கல்லூரிக் கல்வியின்தரம் மிகவும் குறைந்துவிட்டது என்பதை அறிஞர் உணர்கின்றனர். அதற்கு முக்கியமான காரணம் கல்லூரி மாணவர்களுக்கு ஆங்கில அறிவு குறைவாயிருப்பதுதான். இனிமேல் ஆங்கில அறிவை உயர்த்த முயல்வதைவிடத் தமிழிலேயே எல்லாப் பாடங்களையும் கற்பிப்பது எளிதாக இருக்கும். முதலில் தமிழில் கலைச்சொற்களை உருவாக்கி, தேவையான நூல்களைத் தூய தமிழில் எழுதி, ஆசிரியர்களுக்கும் தமிழறிவு ஊட்டி, அதன்பின் தமிழை எல்லாப் பாடங்களிலும் பயிற்சிமொழியாக்குவது என்பது எளிதிலும் விரைவிலும் நடைபெற முடியாத செயலாகும். நமக்கு வேண்டியது செய்தியறிவே யன்றி மொழிப்பயிற்சியன்று. எனவே, ஆங்கிலக் கலைச்சொற்களையே பயன்படுத்தி ஆங்கிலமும் தமிழும் கலந்த ஒரு மணிப்பிரவாள நடையில் கல்லூரிக் கல்வியைப் புகட்டுவது (முக்கியமாக, இயற்கை அறிவியல் துறையிலும் தொழில் நுட்பத் துறையிலும்) பயனுள்ள முயற்சியாய் இருக்கும். எடுத்துக்கொண்ட பாடத்தின் இன்றியமையா அடிப்படை அறிவை இந்த மணிப்பிரவாள நடையின்மூலம் கற்றுக்கொண்ட பின்னர் அவற்றோடு தொடர்புடைய புதிய செய்திகளைத் தெரிந்துகொள்வதற்கு மாணவர்கள் ஆங்கில நூல்களைப் படிக்கலாம். அப்படிப் படிப்பது அவர்களுக்கு எளிதாகவும் இருக்கும்.

தமிழிலேயே அத்தகைய நூல்கள் இருந்தால் அவற்றையும் படிக்கலாம். தேர்வு எழுதும்போது மாணவர்கள் ஆங்கிலத்திலோ தமிழிலோ இரண்டும் கலந்த மணிப்பிரவாள நடையிலோ எழுதலாம். அவ்வாறு செய்வதால் தமிழ்மொழியின் தூய்மை கெட்டுத்தான் போகும். ஆனால், தூய இலக்கியத் தமிழைக் கற்பதற்கும் அதில் கவின்கலை இலக்கியத்தைப் (belles lettres) படைப்பதற்கும் போதுமான வாய்ப்பில்லாமல் போகாது. கற்றறிந்த தமிழாசிரியர்கள் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் அத்தகைய தூய தமிழைக் கற்பித்துக்கொண்டேயிருப்பார்கள். இலக்கியத் துறையில் தூய தமிழும் செய்தியறிவுத் துறையில் கலப்புத் தமிழும் இருப்பதால் தமிழ்மக்களுக்கு ஆக்கம் நேருமேயன்றி இழப்பு நேராது. அவ்வாறன்றி, அறிவியல் தொழில் நுட்பத் துறைகளில் தூய தமிழ்க் கலைச்சொற்களும் நூல்களும் வந்தபின்னரே தமிழைப் பயிற்சிமொழியாக்குவதென்பது கல்லூரிக் கல்வியின் தரம் இன்னும் குறைவதற்கே காரணமாயிருக்கும் என்பது என் கருத்து. அன்றியும், மாணவர்களும் ஆசிரியர்களும் அவ்வப்போது தோன்றும் புதிய கருத்துக்களையும் கண்டு பிடிப்புக்களையும் பற்றி அறிந்துகொள்வதற்கு உதவும் நூல்களும் பருவ இதழ்களும் ஆங்கிலத்தில்தான் முதலில் வெளிவரும். போதுமான விரைவில் அவற்றைத் தமிழில்மொழி பெயர்த்து வெளியிடுவது இயலாது.

நான் மேலே சொன்ன கலப்புத் தமிழால் தூய இலக்கியத் தமிழ் அழிந்துபோகும் என்று அஞ்சுபவர்களுக்குச் சில செய்திகளை நினைவூட்டுவது நல்லது. தமிழில் பேச்சு மொழிக்கும் இலக்கிய மொழிக்கும் எவ்வளவோ வேறுபாடு இருக்கிறது. அப்படியிருந்தும் இலக்கிய மொழி மேலும் மேலும் வளர்ந்து புதிய புதிய அழகைப் பெற்றுக்கொண்டேதான் வந்துள்ளது. இடைக்காலத்தில் வைணவர்கள் தங்களுடைய சமய நூல்களை வடமொழி, தென்மொழி ஆகிய இரண்டும் கலந்த மணிப்பிரவாள நடையில் எழுதினார்கள். தூய இலக்கியத் தமிழின் வளர்ச்சிக்கு அதனால் ஊறு நேரவில்லை. மணிப்பிரவாள நடையில் எழுதப்பட்ட நூல்கள் வைணவத்தைப் பற்றிய 'ரகசியங்களை' அறிந்துகொள்ள விரும்பிய அறிஞர்களுக்காக எழுதப்பட்டவை. அவை பொதுமக்களுக்காக எழுதப் பட்டவை அல்ல. அதனால் அந்த அறிஞர்கள் அந்த நடையின் இயல்புகள் எல்லாவற்றையும் கற்ற பின்னர் அந்த நூல்களைப் படித்தார்கள். அது போலவே, அறிவியல் துறையிலும் தொழில் நுட்ப இயல் துறையிலும் உயர்கல்வி பெற விரும்புபவர்களே நாம் மேலே சொன்ன தமிழ் ஆங்கில மணிப்பிரவாள நடையைப்

பயின்று பயன்படுத்துவார்கள். பொதுமக்களுக்கும் அந்த நடைக்கும் எந்தவிதத் தொடர்பும் இராது. அஃது ஒரு குறிப்பிட்ட துறையில் குறிப்பிட்ட சிலரின் பயிற்சிக்கே உதவத் தக்கது. அதனால் தமிழுக்கு ஊறு நேராது.

தமிழில் புதிய ஒலி வடிவங்களையும் வரி வடிவங்களையும் சேர்த்துக் கொள்வதைப் பற்றியும், ஜ, ஷ, ஸ, ஹ, ஸ்ரீ என்னும் எழுத்துக்களைத் தயங்காமல் பயன்படுத்துவதைப் பற்றியும், ட, ர, ல என்னும் எழுத்துக்களை மொழி முதல் எழுத்துக்களாகப் பயன்படுத்துவதைப் பற்றியும் நான் இதுவரையில் சொன்ன கருத்துக்கள் அனைத்தும் அறிவியல், தொழில் நுட்ப இயல் துறைகளுக்கே பொருந்தும். கவின்கலை இலக்கியத்தில் இந்தப் புதுமைகளைப் புகுத்தல் கூடாது. அந்தத் துறையில் நம்முடைய வழிவழி மரபுகளைப் போற்றிக் காத்தல் இன்றியமையாதது. தமிழின் தனித் தன்மைக்குக் கவின்கலை இலக்கியந்தான் கட்டளைக் கல்லாக இருந்து வருகிறது. இனிமேலும் இருக்க வேண்டும்.

உயரிலக்கிய நடை எழுதும் பொழுதும், ரகரலகர உயிர் மெய்யெழுத்துக்களைப் பொறுத்த வரையில் கீழே காணும் முறைகளைப் பின்பற்றலாம் என்பது என்னுடைய கருத்து.

1. *நிலைமொழி யீற்றில் மெய்யெழுத் திருப்பின்*
   *வருமொழி ரலவில் தொடங்கா தென்க;*
   *அண்ணன் இராமன் என்றே எழுதுக;*
   *அண்ணன் ராமன் எனவன் றுணர்க.*

2. *நிலைமொழி யீற்றில் உயிரெழுத் திருப்பின்*
   *வருமொழி ரலவில் தொடங்கலா மென்க;*
   *தம்பி லக்குவன் என்பதே சாலும்*
   *தம்பி இலக்குவன் என்ப தெதற்கு?*

---

குறிப்பு: இக்கட்டுரையில் ஆசிரியர் வடமொழி எழுத்துக்களை அறிவியல் சொற்களைத் தமிழில் எழுதுவதற்கு மட்டுமே பயன்படுத்த வேண்டுமென்று அறுதியிட்டுக் கூறுவதை நோக்குக. இலக்கிய நடைக்கு இவ்வெழுத்துக்களைப் பயன்படுத்தக் கூடாது என்று கண்டிப்பாகக் கூறுவதை வரவேற்கலாம். இக் கட்டுரை பற்றி—அறிஞர்களின் கருத்துக்கள் வரவேற்கப்படுகின்றன.

—ஆசிரியர்.

# சப்பானிய நெடுங்கணக்கில் தமிழ் ஒலிநிரல்*

[திரு. லோகேஷ் சந்திரா, எம் பி. (மாநிலங்களவை) புதுதில்லி]

(பரல்-௬, ௪௩௬ஆம் பக்கத் தொடர்ச்சி)

சப்பானிய, நாகரி நெடுங்கணக்குகளுக்கிடையில் நிலவும் புறநிலை ஒப்புமைகள் இவ்வளவில் அமையும். இனி, தமிழ் நெடுங் கணக்கினைக் காண்போம்.

உயிர்கள் : a ā i ī u ū e ē ai o ō au

மெய்கள் : k ṅ c ñ ṭ ṇ t n p m y r l v ṛ ḷ r (ṯ t) n

(i) சப்பானிய உயிரொலிகள் தமிழ் உயிரொலிகளோடு மிகச் சரியாக ஒத்திசைக்கின்றன. ஆனால், நெடில் வடிவங்கள் சப்பானிய மொழியில் இன்மையால் ஐந்து உயிரொலிகளே அமைகின்றன. மெய்யொலிகளிலும் சப்பானிய மொழி தன்னிடமில்லா ṅ ñ ṭ ṇ l ṛ ḷ r ஆகிய மெய்களைத் தவிர, ஏனைய ஒலிகளில் தமிழையே முழுதும் பின்பற்றுகின்றது. இருமொழி மெய்யொலிகளின் ஒத்திசைவைக் கீழ்க்காண்க.

தமிழ்: k ṅ c/s ñ t n p m y r l v n

சப்பானிய மொழி: k - s - t n h m y r - v n

(ii) "மேலும், குறிப்பிடத்தக்கதோர் உண்மை, கோஜோன்ட்சுவில் g-, d-, b-, z-, ஒலிகளையேற்கும் அசைகள் இல்லையென்பதாம். இவற்றிற்கிணையான சமற்கிருத அசைகள் நாகரியில் இடம் பெற்றும் கோஜோன்ட்சுவில் இடம் பெறாமை கருதத்தக்கது. சப்பானிய k, t, p, s, முதலிய ஒலிகள் குறிப்பிட்ட சூழல்களில் g, d, b, z எனும் ஒலிகளாக மாற்றம் பெற்றன. எனவேதான் இவை மேற்குறிக்கப்பட்ட ஒலிப்பில் ஒலிகளுக்கு இரண்டாம் நிலை எதிரிணைகளாக விளங்குகின்றன." (Yoshitake, p. 3) ஒரே எழுத்து வடிவத்தால் ஒலிப்பில், ஒலிப்புடை மெய்யொலியைக் குறிக்கும் முறையும், ka எனும் வரி வடிவினையே, ka, ga எனும் இரண்டையும் குறிக்கப் பயன்படுத்தும் தமிழை ஒட்டியே அமைந்ததெனலாம். ஒலிப்பில் ஒலியைக் குறிக்கும் வரிவடிவத்தில் இரு எழுத்தெச்சக்குறிகளைச் (apost

---

* தமிழாக்கம், செல்வி. சத்தியம்.

rophe) சேர்த்து ஒலிப்புடை ஒலியைக் குறிக்கும் புதுமுறையைச் சப்பானிய மொழி மேற்கொள்கின்றது. தமிழில் ஞ் வை அடுத்து வரும் c, j என்று ஒலிக்கப்படுவதைப் போன்று, சப்பானிய மொழியிலும் chi சூழல் காரணமாக ji என்ற ஒலியைப் பெறுகின்றது. இத்தன்மையிலும் சப்பானிய மொழி தமிழை ஒத்து விளங்குகின்றது. சப்பானிய t/d, p/b மாற்றங்களும் தமிழைப் போன்றனவே.

(iii) தமிழில் c ஒலி சமற்கிருத சீறொலிகளைக் குறிக்கவும் பயன்படுகின்றது. தமிழ் Cani—சமற்கிருதம் Śani. சப்பானிய மொழியில் ti ஒலி, அண்ண ஒலி chi—ஆக மாறி, c-இன் ஒலிச் செயற்பாட்டினைப் புரிகின்றது. சீறொலிகள் இல்லாத தமிழில் சமற்கிருத சீறொலிகளை c ஈடு செய்வதால், தமிழ் ஒலி நிரலை முழுதும் பின்பற்ற வேண்டும் எனும் நோக்கினரான சப்பானிய நெடுங்கணக்கினை அமைத்தவருக்கு, தமிழ் c-ன் இடத்தில் சப்பானிய S-ஐ அமைப்பதைத் தவிர வேறு வழியில்லை. சப்பானிய நெடுங்கணக்கில் S ஒலிபெறும் இடத்தைப்பற்றி அடிப்படைத் தெளிவின்மையின், சப்பானிய ஒலியியல் வளர்ச்சி வரலாற்றினை அறிந்து கொள்ளுதல் சிக்கலுடைத்தாகின்றது. "50 அசையொலிகளையுடைய சப்பானிய அட்டவணை தேவ நாகரி அமைப்பைப் பின்பற்றி உருவாக்கப்பட்டது என்பது பெரிதும் ஐயத்திற்குரியது. இவ்விரு நிரல்களையும் நோக்க, S-ஒலிபெறும் சப்பானிய அசையொலிகள் சமற்கிருத S (ts), J (dz) அசையொலிகளுக்கு இணையாக விளங்குதல் புலனாகும். எனினும் அறிஞர் சிலர் நம்புவதைப்போல, இஃதொன்றன் துணையாலேயே, சப்பானிய S ஒலி (ts) என 10ஆம் நூற்றாண்டில் ஒலிக்கப்பட்டது என்ற முடிவுக்கு வருதல் இயலாது. ஏனெனில் திரு. பாகேல் முன்பே குறிப்பிட்டதுபோல, கோஜோன்ட்சுவின் ஆக்குநர் எளிமைக்காக மட்டுமே S ஒலி பெறும் அசையொலிகளை அக் குறிப்பிட்ட இடத்தில் அமைத்திருக்கலாம்.[6]

(iv) "தற்கால சப்பானிய (h) ஒலி இதழொலி மூலத்திலிருந்து தோற்றம் பெற்றிருத்தல் வேண்டும் என்பது தற்போது உறுதியாக்கப்பட்டுள்ளது. இவ்வொலி, பழைய பல்லிதழ் ஒலிப்பில் உரசொலி (f) லிருந்தோ அல்லது (p) லிருந்து தோன்றியிருக்கக் கூடிய (F)-லிருந்தோ தோன்றியிருக்கலாம். கி. பி. 7, 8 ஆம் நூற்றாண்டுகளில் இம் மெய் எப்படி ஒலிக்கப்பட்டிருக்கும் என்பதே சிக்கல். (F) என்றா? (f) என்றா? அல்லது

6. Yoshitake, o.c., p. 52.

(p) என்று? பழைய சீன மொழியில் b ஒலி, இல்லாமையினால், அவ்வொலி, செய்யூன் (Ch 'ieh - y u n) குறிக்கின்ற p-, p'-, b'- ஒலிகளால் குறிக்கப்பட்டதாக, மேன்யோகானு (Man - yo - gana) பட்டியல் காட்டுகின்றது. இச் செய்தி அச் சப்பானிய மெய் (h) அல்ல என்பதைத் தவிர்த்து, அதனுடைய உண்மை இயல்பை உணர்த்தவில்லை,'' (Yoshitake, pp. 46, 47).

சப்பானிய மொழியில் hஐ அடுத்துவரும் m ஒலி தமிழின் p ஒலிக்கு இணையாகின்றது. pa—வினை ஒலிக்க சப்பானிய மொழியில் ha—வின் வரிவடிவத்திற்கு மேலாகச் சிறு வட்டம் இடப்படுகின்றது. இரு எழுத்தெச்சக்குறி இணைக்கப்படின் ha, ba என ஒலிக்கப்படும். இதன் மூலம் புதிய ha பழைய pa>fa என்பதற்கிணையாக அமைந்துள்ளமையை அறியலாகும். இந்த p>h எனும் வியப்பூட்டும் மாற்றம் பற்றிய கால்டுவெல் கூற்று; "h ஒலி தமிழிலும் மலையாளத்திலும் இல்லை. மராத்தியில் சில போது நிகழ்வதைப் போலப் புதுக்கன்னடத்தில் p—க்கு மாறாக h பயன்படுத்தப்படுகின்றது."[7]

(v) தவறாமல் இறுதியில் இடம்பெறும் n ஒலியோடு தமிழ் நெடுங்கணக்கு முற்றுப்பெறுகின்றது.[8] சப்பானிய நெடுங்கணக்கும் இறுதி n ஒலியொடு முற்றுப்பெறுதல் கிளர்ச்சியூட்டும் ஒப்புமையாம். சப்பானிய மொழியில் n ஒலி un என்ற ஒலிப்பினை உடையது. இஃது, அசையில் இந்த n இறுதியில் தான் இடம் பெறும் என்பதை உணர்த்துகின்றது. 50 ஒலிகளை யுடைய சப்பானிய நெடுங்கணக்கு இவ்வெண் வரையறைக்கு மிகையான wo, un எனும் ஒலிகளோடு முற்றுப் பெறுகின்றது. இதைப் போன்றே தமிழின் இறுதி n ஒலியும் 30 எழுத்தொலிகளின் எண்ணிக்கையுள் அடங்குவதில்லை. சித்தம் நாகரியின் இறுதி எழுத்தொலியாகிய llam என்பதிலும் இறுதி முக்கொலி இணைக்கப்பட்டுள்ளது. Lla என்பது நாமடி ஒலி L-ஐக் குறிப்பது. இந் நாமடி ஒலி, சில வேத நூல்களில் இரு உயிர்களுக்கிடையில் வரும் d-ன் இடத்தைப் பெறுகின்றது. (W. D. Whitney, Sanskrit Grammar, Cambridge, Mass. 1950, p. 19 Para. 54).

(தொடரும்)

---

7. Robert Caldwell, A comparative Grammar of the Dravidian or South Indian Family of Languages, by rev. J. L. Wyatt, T. Ramakrishna Pillai, Madras 1961, p. 147.

8. Robert Caldwell, O C., p. 131.

# கலைக்களஞ்சியத்தின் தலைமைப் பதிப்பாசிரியர்
## டாக்டர் ந. சுப்புரெட்டியார்

கழக நூலாசிரியர்களுள் ஒருவரும், பல அறிவியல், ஆராய்ச்சி நூல்களின் ஆசிரியருமான டாக்டர் ந. சுப்புரெட்டியார் எம். ஏ., பி. எசி., எல். டி., பிஎச். டி, அவர்கள் 1—7—78 முதல் சென்னைத் தமிழ் வளர்ச்சிக் கழகச் சார்பில் உருவாகிவரும் தமிழ்க் கலைக்களஞ்சியத்தின் (Tamil Encyclopaedia) தலைமைப் பதிப்பாசிரியராகப் பதவி ஏற்றுள்ளார்கள்.



டாக்டர் ரெட்டியார் அவர்கள் திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்தவர். இவர் துறையூர் சமீன்தார் உயர்நிலைப்பள்ளியில் 9 ஆண்டுகள் தலைமை ஆசிரியராகவும், காரைக்குடி அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் 10 ஆண்டுகள் தமிழ்ப் பேராசிரியராகவும் பணியாற்றிப் பின்னர் திருப்பதி, திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில், தம் சொந்த முயற்சியால், தமிழக அரசின் மானியம் பெற்றுத் தமிழ்த் துறையினை நிறுவச்செய்து, அதன் பேராசிரியராகவும் துறைத் தலைவராகவும் 17 ஆண்டுகள் பணியாற்றிச் சென்ற ஆண்டில் ஓய்வு பெற்றுர். இவர் அப் பல்கலைக் கழகப் பேராசிரியராக இருந்த காலத்தில் இவரிடம் பயின்ற பலர் எம். ஏ. பட்டதாரிகளாகவும், பிஎச். டி. பட்டம் பெற்றவர்களாகவும் திகழ்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இப் பேராசிரியர் கழகத்திடமும், கழக ஆட்சியாளரிடமும் நெருங்கிய தொடர்பும் பற்றும் கொண்டவர். இவர் எழுதிய அறிவியல் நூல்களும், சிறுவர் இலக்கியங்களும் கழகவழி வெளிவந்துள்ளன என்பதும்,அவற்றுள் இவர் எழுதிய 'இராக்கெட்டுகள்' என்னும் நூல் தமிழக அரசின் பரிசினைப் பெற்றுள்ளது என்பதும் குறிப்பிடத்தக்கனவாகும்.

ஏறக்குறைய முப்பதாண்டுகள் கலைக்களஞ்சியத்தின் தலைமைப் பதிப்பாசிரியராக அரும்பணியாற்றிய பேராசிரியர் பெரியசாமித் தூரன் அவர்களின் இடத்தில் நம் டாக்டர் ரெட்டியார் அவர்கள் அமர்வு பெற்றிருப்பது சாலப் பொருத்தமுடைத்தாகும்.

இவர் தமிழ் இலக்கியம், இலக்கணம், உளவியல், பயிற்றுமுறை, மெய்ப்பொருள், சமயம் ஆகிய துறைகளில் எழுதியுள்ள நூல்கள் 40 க்கு மேற்பட்டனவாகும்.

இங்ஙனம் பல்லாற்றானும் சிறந்த பேராசிரியராக விளங்கும் இவர்கள் கலைக்களஞ்சியத் தலைமைப் பதிப்பாசிரியர் பொறுப்பேற்றிருப்பது குறித்து மகிழ்ச்சி அடைவதோடு அன்னாருக்கு எம் உளமார்ந்த வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

———

# திரு. கே. வேங்கடசுப்பிரமணியம் 'டாக்டர்' பட்டம் பெற்ருர்

தமிழக அரசுத் தேர்வுத்துறை இயக்குநரான திரு. கே. வேங்கட சுப்பிரமணியம் அவர்கள் அண்மையில் மாவரசர் சயோசிராவ் பரோடா பல்கலைக் கழகத்தின் வழியாக 'டாக்டர்' பட்டம் (Ph. D.) பெற்றுள்ளார். இவர்தம் ஆய் வுத் தலைப்பு, 'கல்வி நிதி ஒதுக் கீட்டில் பொருட் செலவும் அதன் பயனும்—ஒரு பொரு ளியல் ஆய்வு' (Cost Benefit Analysis of Educational Expenditure) என்பதாகும்.



கல்வித்துறைப் பொரு ளியல் (Economics of Education) பற்றி ஆய்வு செய்து 'டாக்டர்' பட்டம் பெற்றவர்கள் இந்தியாவில் இதுவரை ஒன்பது பேர்கள்தாம். டாக்டர் கே. வி. (K. V.) 'பத்தாவது பண்டா ரகர்' ஆவார். தமிழ் நாட்டில் இத் துறையில் இதுவரை யாரும் 'டாக்டர் பட்ட ஆய்வு' நிகழ்த்தியதாகத் தெரியவில்லை.

இந்திய அரசு ஆண்டுதோறும் நான்காயிரம் கோடிகள் கல்விக் காகச் செலவிட்டு வருகின்றது. தமிழ்நாடு அரசு ஆண்டுதோறும் 180 கோடி கல்விப் பணிக்காக ஒதுக்குகிறது. இவ்வாறு செலவு செய்வதற்கு ஏற்ப அதனால் கிடைக்கும் பலன் எவ்வளவு என்பதைப் பொருளியல் அடிப்படையில் ஆய்வு செய்துள்ளார் டாக்டர் கே. வி. இத்தகைய ஆய்வு நாட்டில் கல்வியின் சீரான வளர்ச்சிக்கு உதவி செய்யும்.

இவர்தம் ஆய்வேட்டினை உலகில் தலைசிறந்து விளங்கும் பொரு ளியல், கல்வித்துறைப் பேரறிஞர்கள் மதிப்பீடு செய்து பாராட்டியுள் ளனர். குறிப்பாக இவ் ஆய்வேட்டினை மதிப்பீடு செய்த சிகாகோ பல்கலைக் கழகப் பொருளியல்துறைப் பேராசிரியர் டாக்டர் சூல்ச் (Dr. T. W. SCHULTZ) ஆய்வேட்டையும் ஆய்வாளரையும் பெரி தும் பாராட்டியுள்ளார். அத்துடன் இதுவரை எங்கும் எப்போதும் கேள்வியுறாத வகையில் அப் பேராசிரியர் இவ் ஆய்வேட்டினை மதிப் பீடு செய்தற்காக அவருக்குப் பல்கலைக் கழகம் அளித்த ஊதிய மான ரூ 500 ஐயும் டாக்டர் கே. வி. அவர்கட்குப் பரிசுத் தொகை யாக அளித்துவிடுமாறு அப் பல்கலைக் கழகத்திற்கு எழுதியுள்ளார். ஆய்வேடு எல்லா வகையிலும் சிறந்து விளங்குவதைக் கண்டு அதனைத் தம் சிகாகோ பல்கலைக் கழகத்தின் வழியாக வெளியிடவும் அப் பேராசிரியர் ஏற்பாடு செய்துள்ளதாகத் தெரிகிறது. இந்திய ருக்கு, அதிலும் குறிப்பாகத் தமிழ் அறிஞர் ஒருவருக்கு இத்தகைய

பரிசும் பாராட்டும் கிடைத்திருப்பது தமிழர் அனைவரும் மகிழ்தற்குரிய சிறப்புச் செய்தியாகும்.

டாக்டர் சூல்ச் ஆய்வேட்டை மதிப்பிட்டுப் பாராட்டுகையில் 'பொருளியலுக்குத் திரு. கே. வேங்கடசுப்பிரமணியம் பெருந்தொண்டாற்றியுள்ளார். அவர் ஆய்வின் மூலக் கருத்துக்குத் தொடர்பான பல தலைப்புக்களையும் ஆய்ந்து பிற ஆய்வேடுகளைவிடத் தம் ஆய்வேடு பல நிலைகளைக் கடந்து முன்னணியில் நிற்கச் செய்துள்ளார். இதில் தம் ஆய்வுக்குத் தொடர்பான பல புள்ளி விவரங்களை மிகவும் அரும்பாடுபட்டுத் தேடித் தொகுத்துக் கொடுத்துள்ளதால் இது பயன்மிகவுடைய மூல நூலாகத் திகழ்கிறது. இத்தகைய அமைப்பைப் பிற ஆய்வேடுகளில் காண்பது மிகவும் அரிது' என்று குறிப்பிட்டுள்ளார்.

டாக்டர் கே. வி. அவர்கள் தமக்குக் கிடைத்த பரிசுத் தொகையுடன் அதே அளவு தொகையைச் சேர்த்துத் தமக்கு ஆய்வு செய்யும் வாய்ப்பினையளித்த பரோடா பல்கலைக் கழகத்தில் டாக்டர் சூல்ச் பெயரில் ஒரு பரிசுத் திட்டத்தை ஏற்படுத்துவதற்குத் திட்டமிட்டுள்ளார். இது இவர்தம் பெருந்தன்மையை நன்கு புலப்படுத்துகின்றது. இவர் கல்வித்துறையில் மேலும் பல உயர்வுகளைப் பெற்றுத், தமிழ் நாட்டுக் கல்வி வளர்ச்சிக்குப் பெருந் தொண்டாற்றுவார் என்று உறுதியாக நம்பலாம்.

---

## கவியரசு கண்ணதாசனுக்கு 'அரசவைக் கவிஞர்' விருது

இன்றுள்ள திரை இசைக் கவிஞர்களுள் தலைசிறந்து விளங்கும் கவியரசு கண்ணதாசன் அவர்கள் தமிழக அரசால் அவர்தம் ஆயுட்காலம் வரை 'அரசவைக் கவிஞரா'க அமர்த்தப் பெற்றுள்ளது பாராட்டுதற்குரிய செய்கையாகும். தமிழ் வளர்ச்சியில் ஒரு பணியாக இதனைச் செய்துள்ள தமிழக முதல்வர் மாண்புமிகு எம். ஜி. இராமச்சந்திரன் அவர்கள் தலைமையில் அமைந்துள்ள அமைச்சரவைக்குத் தமிழ் மக்கள் நன்றிக்கடப்பாடுடையர். நாடு விடுதலையடைந்தபின் முதன் முதலாக நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம் பிள்ளை அவர்கள் 'அரசவைக் கவிஞராக' அமர்த்தப்பெற்றார். அவருக்குப் பின் அப்பொறுப்பில் வேறு யாரும் அமர்த்தப்பெறவில்லை. நீண்ட காலத்திற்குப்பின் இன்றைய தமிழக அரசு இந்த நல்ல பணியைத் தொடர்ந்துள்ளது.

சென்னை இராசாசி மண்டபத்தில் இம் மாதம் 9ஆம் நாள் நடைபெற்ற சிறப்பு நிகழ்ச்சியில் கவியரசு அவர்களுக்குத் தமிழக ஆளுநர் மாண்பமை. பிரபுதாசு பட்வாரி இவ் விருதை வழங்கினர். நிகழ்ச்சிக்குத் தமிழகக் கல்வி அமைச்சர் மாண்புமிகு திரு. செ. அரங்கநாயகம் தலைமை தாங்கினர். மாண்புமிகு அமைச்சர்கள் கா. மனோகரன், இராம. வீரப்பன் ஆகியோரும் நீதிபதி கோகுலகிருட்டிணன், சிலம்புச் செல்வர் ம. பொ. சி. டாக்டர். வ. செ. குழந்தைசாமி, கவிஞர் சுரதா ஆகியோரும் கவியரசின் கவிதைத் தொண்டைப் பாராட்டிப் பேசினர். திரு. டி. வி. நாராயணசாமி

தகுதியுரையினைப் படித்தார். விழாவிற்கு வந்திருந்த அனைவரையும் கல்விச் செயலர் திரு. சி. ஜி. இரங்கபாசியம் வரவேற்றார். தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் கொண்டல் சு. மகாதேவன் நன்றி நவின்றார்.

அரசின் சார்பில் ஆளுநர் கவியரசுக்குத் தகுதி இதழை வழங்கிப் பொன்னாடை போர்த்திப் பொற்பதக்கத்துடன் கூடிய பொற் சங்கிலியை அணிவித்தார்.



கவிதை, கதை, கட்டுரை போன்ற பல துறைகளிலும் தம் எழுத்தாற்றலை வளர்த்துக்கொண்ட கவியரசர் 'தென்றல், தென்றல் திரை, முல்லை, கடிதம், கண்ணதாசன்' போன்ற பல இதழ்களை நடத்தியுள்ளார். இவர்தம் கவிதைகளும் கதைகளும் நூல்வடிவில் வெளிவந்துள்ளன. ஏறக்குறைய எட்டுக் கவிதைத் தொகுதிகளையும் 20க்கு மேற்பட்ட புதினங்களையும் 20க்கு மேற்பட்ட கட்டுரை நூல்களையும் இவர் படைத்துள்ளார். இவருடைய கவிதைகளில் சில ஆங்கிலத்திலும் பிற மொழிகளிலும் மொழிபெயர்க்கப் பெற்றுள்ளன.

தமிழ் மொழிக்குப் பல வகைகளிலும் தொண்டாற்றத் துடிக்கும் தமிழக முதல்வர் அவர்கள் அதில் ஒரு பணியாக அரசவைக் கவிஞரை அமர்த்தியதற்காக மீண்டும் பாராட்டுகிறோம்.

———

# செய்திகளும் குறிப்புக்களும்

## தமிழக அரசின் சிறப்புப் பேராளர் மாண்புமிகு க. இராசாராம்

மாண்புமிகு க. இராசாராம் அவர்கள் தமிழக அரசு சிறப்புப் பேராளர் (Special Representative) ஆகப் புதுத் தில்லியில் தங்கியிருந்து மத்திய மாநில உறவுகளைப் பற்றிய பணிகளைக் கவனிக்கும் பொருட்டு 15-5—78 இல் அமைச்சர்க்குரிய உயரிய நிலையில் அமர்த்தப் பெற்றிருக்கிறார்கள். அவர்கள் அப்பணியை ஏற்றுக் கொண்டு புதுதில்லியில் தமிழக அரசுக்குச் சொந்தமான தமிழ்நாடு இல்லத்தில் தமது அலுவலகத்தை அமைத்துக் கொண்டு பணி செய்து வருகின்றார்கள் என்ற செய்தி மகிழ்ச்சிக்குரியதாகும்.

## உலகத் தமிழ்க்கழக 4 வது மாநாடு

உலகத் தமிழ்க் கழக 4 ஆவது பொது மாநாடு 2—7—78 அன்று சென்னைப் பெரியார் திடலில் நடைபெற்றது. கழகப் பொருளாளர் செங்கைச் செந்தமிழ்க்கிழார் கொடியேற்றி வைத்தார். புலவர் நக்கீரனார் மாநாட்டிற்குத் தலைமை தாங்கினார்.

கழகப் பொதுச் செயலாளர் புலவர் இறைக்குருவனார் வரவேற்புரை நிகழ்த்தினார். பர். இளவரசு மறைமலையடிகளார் படத்தைத் திறந்துவைத்து உரையாற்றினார்.

பாவலரேறு பெருஞ்சித்திரனார், பர். வ. சுப. மாணிக்கம். திரு. அசாரியா, பர். க. ப. அறவாணன், புலவர்கள் தி. நா அறிவொளி, மி. மு. சின்னாண்டார், த. ச. தமிழன், இரா. அருட்குவை. கதிர் தமிழ்வாணன், மறைநித்தலின்பன், திருவாட்டியர் கலைச்செல்வி, தாயம்மைஅறவாணன், தமிழ்ச்செல்வி முதலியவர்கள் உரையாற்றினர்.

சிங்கப்பூர் கலைக்கோயில் நிறுவனத்தின் சார்பில் வருகைதந்த திரு. கருப்பையா அவர்கள் பாவாணர் அவர்கட்கும், பாவலரேறு பெருஞ்சித்திரனார் அவர்கட்கும் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தார்.

நெய்வேலிச் செந்தமிழ் இசைக் குழுவினரின் இசை நிகழ்ச்சியுடன் மாநாடு நிறைவுற்றது.

## ம. ப பெரியசாமித்தூரன் ஓய்வு பெற்றார்

தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் செயலாளராகவும், கலைக்களஞ்சியம், குழந்தைகள் கலைக்களஞ்சியம் ஆகியவற்றை உருவாக்கி வெளியிடும் தலைமைப் பொறுப்பாசிரியராகவும் கடந்த முப்பது ஆண்டுக்காலம் ஓவாது அரும்பணியாற்றிய திரு. ம. ப. பெரியசாமித்தூரன் அவர்கள் அண்மையில் மேற்படி பணிகளினின்றும் ஓய்வுபெற்றுள்ளார்.

பாடல்கள், சிறுகதைகள், கட்டுரைகள், நாடகங்கள், உளவியல் நூல்கள், சிறுவர் இலக்கியம், இசைப்பாடல்கள் முதலிய பல துறை

களிலும் ஈடுபட்டு ஐம்பதுக்கு மேற்பட்ட நூல்கள் திரு. தூரன் அவர்களால் எழுதப்பட்டுள்ளன. 'பாரதி தமிழ்' என்னும் தலைப்பில் மறைந்து கிடந்த சுப்பிரமணிய பாரதியாரின் எழுத்துக்கள் பல திரு. தூரன் அவர்களின் முயற்சியாலேயே வெளிப்படுத்தப்பட்டன. என்பது குறிப்பிடத்தக்கது.

## தமிழ்ப் பேரகர முதலி (Tamil Lexicon) புதிய பதிப்பு

பல்லாண்டுகளாகக் கிடைக்கப் பெறுதிருந்த, சென்னைப் பல்கலைக் கழகத்தின் தமிழ்ப் பேரகர முதலி (7 பகுதிகள்) தற்போது நிகண்டாசிரியர்கள், மொழிநூல் வல்லுநர்கள், பன்மொழிப் புலவர்கள் ஆகியோரைக் கொண்ட ஒரு குழுவினரால் திருந்திய பதிப்பாக வெளிவர விருக்கின்றது எனவும், இப் பேரகர முதலி தேவைப்படுவோர் சென்னைப் பல்கலைக் கழகப் பதிவாளருக்கு எழுதிப் பதிவு செய்து கொள்ளுமாறும் பதிவாளர் அறிவிக்கிறார்.

## தமிழ்நாடு தேவார ஓதுவார் மூர்த்திகள் சங்கம்

இச் சங்கத்தின் 30 ஆவது திங்கள் வழிபாடும் மாணிக்கவாசகர் திருநாளும் நால்வர் படத் திறப்பும், பூவிருந்தவல்லி வைத்தீசுவர சுவாமி திருக்கோயிலில் 2—7—78 காலை 8 மணி அளவில் சைதை தேவாரம் த. நடராசன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. ஓதுவார் மூர்த்திகள் பலரும் கலந்துகொண்டனர்.

## இராசம்பாடி மறைமலை அடிகள் சைவசித்தாந்த சபை மூன்றுவது ஆண்டு விழா

மதுரை இராசம்பாடியில் உள்ள இச் சபையின் மூன்றுவது ஆண்டுவிழா, 14—7—78 இல் அருள்மிகு மீனுட்சியம்மன் திருக்கோயில் முன்பக்கமுள்ள காந்தி சிலைப் பூங்காவில் நடைபெறும். உயர்திரு எஸ். இராமாநுசம், எம், ஏ., எம். இடி. அவர்கள் விழா வைத் துவக்கி வைப்பார். இவ் விழாவினை யொட்டி அன்று மாலை மதுரை திருவள்ளுவர் கழகத்தில் டாக்டர் தெ. பொ. மீனுட்சி சுந்தரனுர் அவர்கள் தலைமையில் கருத்தரங்கம் நடைபெறும்.

### மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(முன் பரல்-௬௦, ௹௧௧ ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் கழக ஆட்சியாளர் (சூன்) | 100 | 00 |
| உயர்திரு. ஆ. சுப்பையா பிள்ளை அவர்கள் கழக மேலாளர் (சூன்) | 5 | 00 |
| உயர்திரு. சொ. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் (பிறந்த நாள் நன்கொடை) | 10 | 00 |
| திரு. தைரி-தரளம், காத்தப்பாடி | 5 | 00 |
| திரு. இர. விருத்தம்மாள் ஆச்சி, சிதம்பரம். (பவளவிழா நன்கொடை), | 5 | 00 |

# மதிப்புரை

## இலக்கணத் தொகை யாப்பு—பாட்டியல்

[டாக்டர். ச. வே. சுப்பிரமணியம். தமிழ்ப் பதிப்பகம், கஸ்தூரி பாய் நகர், சென்னை-20. ரூ. 34-00] (660 பக்)

தொல்காப்பியம் முதல் யாப்பொளி வரை பல்வகையான இலக்கண நூல்கள் யாப்பிலக்கணம் பற்றிக் கூறுகின்றன. அவற்றைத் தொகுத்து, யாப்பு பற்றிய ஆய்வு நடத்துவோருக்கும் சிறப்பாக யாப்பிலக்கணம் பயில்வோருக்கும் பயன்படும் வகையில் தரப்பட்டுள்ளது இந் நூல். இத்துடன் சிற்றிலக்கிய வகைகளுக்கு இலக்கணம் கூறும் பாட்டியல் நூல்களின் நூற்பாக்களையும் இணைத்திருப்பது பாராட்டுதற்குரியது. யாப்பு, பாட்டியல் தொடர்பான 20 நூல்களைத் திரட்டித் தந்துள்ளதோடு பதிப்பாசிரியர் வரலாற்றடிப் படையில் யாப்பு, பாட்டியல் இலக்கணங்களில் ஏற்பட்டுள்ள வளர்ச்சி, மாற்றங்கள், பாவினங்களுக்குள் உள்ள வேறுபாடுகள், பாட்டியல் நூல்களைப் பற்றிய அறிமுகம் முதலியவற்றைக் காட்டும் விரிவான திறனாய்வுடன் கூடிய முன்னுரையை நூலில் சேர்த்துள்ளார். தமிழாய்வுக்குச் சிறந்த உறுதுணையாக இந்நூலைக் கொள்ளலாம். பதிப்பாசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கது.

## தமிழ் வளர்ச்சி

[ஆசிரியர் : இரா. மதிவாணன், க. மு., கல். இ. தாய் நாடு பதிப்பகம், 31, புகைவண்டி நிலையப் பாதை, வில்லிவாக்கம், சென்னை-49. விலை : ரூபா 3-50]

தமிழ் வளரவேண்டும் எனக் கூறுதார் இல்லை. எழுதாதார் இல்லை. ஆனல், தமிழை ஏன் வளர்த்தல் வேண்டும்? எப்படி வளர்த்தல் வேண்டும்? அவ் வளர்ச்சியில் கருத்தூன்ருவிடில் நேரும் இழுக்குகள், இழப்புக்கள், இடர்ப்பாடுகள் யாவை என்பன போன்ற செய்திகளை ஒருமுறைப்படுத்தி எடுத்துரைப்பார் இல்லை. அக் குறைபாட்டினை நீக்கும் வண்ணம் இந் நூலாசிரியர் பதினெரு தலைப்புக்களில், தக்க சான்றுகளோடும், கடா விடைகள் மூலம் தமிழ் வளர்ச்சிக்கு வழிகாட்டுகிருர். படித்துப் பயன்காண வேண்டிய அரியநூல்.

## எ. ஆ. கிருஷ்ண பிள்ளையின் நூல்கள் (ஓர் ஆராய்ச்சி)

[டாக்டர் வீ. ஞானசிகாமணி, எம்.ஏ , பி.எச்.டி, டிப்.தெலு. வேதாகம மாணவர் பதிப்பகம். 66/7 அசோசியேசன் சாலை, மாதவரம், சென்னை-60, விலை : ரூ. 25-00]

19ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த கிறித்தவப் புலவர்களுள் கம்பருக்கு ஒப்பாக வைத்தெண்ணப் படுபவர் திரு. எ. ஆ. கிருஷ்ண பிள்ளை அவர்களாவர். ஆனல், அவர்தம் வரலாறு, அவர் இயற்றிய நூல்கள், அந் நூல்களின் திறம் இன்ன பிறவற்றைத் திறம்பட எடுத்துரைத்து அவர்தம் புகழ் பரப்புவார் மிக அரியர். அக் குறைபாட்டினை நீக்கும் வண்ணம் டாக்டர் வீ. ஞானசிகாமணி அவர்கள் எழுதியுள்ள இவ் ஆராய்ச்சி நூல், ஒரு திறனாய்வு எங்ஙனம் அமைதல் வேண்டும் என்பதற்கொரு சிறந்த எடுத்துக்காட்டாய்த் திகழ்கிறது. ஆசிரியரின் முயற்சி பாராட்டத் தக்கது. 400 பக்கங்கள். அழகிய பதிப்பு.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை, 60, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : வ. சுப்பையா.

அப்பர் அச்சகம், சென்னை-1.